தொடக்கம் :

திருமாது மேவிய தென் செப்பறையின் வாழ்சற்குருனாத
பொன்னம்பல குருமேற் றறாதமிழால் அந்தாதிபாட
அறுமுகற்கு முன்னுதித்த கந்தரா கடக்களிறே காப்பு

நூல்

பூங்கமலத் தயன்மாற்குஞ் சோதி
செம்பொற் பொது விலாங்கமலப்
பதந்தூக்கி நின்றாடி யடியவர்க்கு

முடிவு :

முன்னம் பலமிகப் பெற்றிருந்தா
லிருள் மூடறுத்து யின்னம்பலத்து வெய்தாமற்
சாயுச்சியத்தே யிருத்தும் பொன்னம்பல
குருசாமி பங்கேருகப் பூங்கழலே —36

செப்பறைக் கனகசபை நடராச பொன்னம்பல சற்குருமீது
அந்தாதி சிவலிங்கம் கையெழுத்து.

குறிப்பு :

குருநாதர் மீது சீடர் பாடிய அந்தாதிப் பாடல்கள்.



வரிசை எண் : 4259 சுவடி எண் : 1915 g

# குரு தோத்திரக் கலித்துறை

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 27 × 2½ செ மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அப்பறை வேணி கரைக் கண்டங்
கண்ணுத லியாவு மொழித்
திப்புவி மீதிலடியேனை யாட்கொள
வென்று மகிழ்ந்

முடிவு :

யகத்திய ஞானத் தெரிசனக் காட்சி
நல்கவென்று சிவபோக மருள .....
ளம்பல தேசிகன் மலர்த்தாள் சிந்தை செய்வாம்.

குறிப்பு :

குருநாதர் மீது பாடிய கலித்துறை.



வரிசை எண் : 4260 சுவடி எண் : 1915-h

# குருபாத தோத்திரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 27 × 2½ செ.மீ.

பக்கத்திற்கு: 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அருள்பெருகு செப்பறை வாழ்
பொன்னம்பல தேசிக
ரருள் கனக சபாபதிக் குரவா
சந்திரசேகரா ஆனந்தமயான சுவாமிநாததேச
ரருள் பொன்னம்பல மூர்த்தி

முடிவு :

எழுந்தருளி இருமலங் கணிக்கி
தருவதுவுஞ் சகலற்கு மூன்றுமல
மகற்றவருள் செப்பறை மாநகரில் வாழுந்
தன்மை யருணாசலன் முள் தலைமேற் கொள்வாம் —4

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இதன் பின் ஒரு ஏடு தோத்திரம் எழுதியது உளது.



வரிசை எண் : 4261 சுவடி எண் : 1915-1

# சொக்கநாத வெண்பா

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 200 அளவு : 22 × 2½ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : குருஞான சம்பந்தர் பொருள் : தோத்திரம்

நிலைமை : மிகப் பழுது முழுமை முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நீயே பரம சிவ னானக்கால் நின்மலனே
நாயே னுளமகிழ நன்றாய்.........
கருத்தடங்க நின்கருணை காட்டியின்ப வெள்ள
மருத்திடுவாய் சொக்கநா தா.

முடிவு :

மனனை மலமகற்றி மூதறிவா னந்தமயந்
த ......... யு நீயாண்டு பரி சொக்க
நாதாந்த வருட்கடலில் தாண்டு.........

குறிப்பு :

இது, தருமையாதீனத்து ஆன்மார்த்த மூர்த்தி சொக்கநாதர் மீது பாடப்பட்ட வெண்பாவாகும். சிறந்த கருத்துக்களைக் கொண்டது. அச்சாகியுளது.



வரிசை எண் : 4262 சுவடி எண் : 1916-a

# திருத்தொண்டத் தொகை

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 14 × 5½ செ.மீ.

பக்கத்திற்கு : 20 வரிகள் ஆசிரியர் : சுந்தரமூர்த்தி நாயனார் பொருள் : திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

வேகமா முத்திசேரும் வினைகளுந்
தாகபோக விடாத நளர்ச்சியு

சோக வாரியினால் வருந்துன்பமும்
போக யானை முகத்தனைப் போற்று வாம்.

நூல்

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்

முடிவு :

யென்னவனா மானடியே யடைந்திட்ட சடைய
னிசைஞானி காதலன் திருநாவலூர்க்கோ
னன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மனுக்கு அன்பரா வாரே ! — 11
திருத்தொண்டத் தொகை முற்றும்.
திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, திருவாரூரில் சுந்தர மூர்த்தி சுவாமிகளால் பாடப் பட்டதாகும். பெரிய புராணம் பாடுவதற்கு மூலகாரணமாயிருந்தார். இது, பெரிய புராணத்தின் முன்னர் எழுதப்பட்டுளது.

இதற்கு முன்னர் பெரியபுராண நாயன் மார்களின் அட்டவணை எழுதிய ஏடுகள் உள்ளன. மேலும், 63-வரும் என்னென்ன சாதியைச் சார்ந்தவர்கள் என்ற பாடல் ஒன்றும் உளது. இப்பாடல், எமது சுவடி விளக்க 7-ஆம் தொகுப்பு 235 ஆம் பக்கம் காண்க.



வரிசை எண் : 4263 சுவடி எண் : 1916-b

# உவமன்னியச் சிறப்பு

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 14 x 5½ செ.மீ
பக்கத்திற்கு : 20 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : திருமுறை
நிலைமை ; நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

இலாமைவன் மீண்டவன்
றாய மாலவன ரைச் சாதி யின்
மூழ்கியோ றாயவன னமுங்
காணாத வர்க்கு மாயவன்

முடிவு :

வானந்த வாரி விரவிடச் செய்ய
நீள்சடை மாமுனி செலவுவழி யைய
நீங்கலினவு வோ ரந்தணர் — 28
சம்புவின் னடித்தாமரை — — —

குறிப்பு:

உபமன்யு முனிவருடைய சிறப்பைக் கூறுகிறது.



வரிசை எண் : 4264 சுவடி எண் : 1916-c

# பெரிய பூராணம்

ஏடுகள் : 355 கி. எண்ணிக்கை : 20000 அளவு : 14 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு : 20 வரிகள் ஆசிரியர் : சேக்கிழார் பொருள் : திருமுறை
நிலைமை : நல்ல நிலை (பழுது) முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்
கடவுள் வாழ்த்து

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத்தாடு வான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம் —1

25-வது தொகுப்பு

முடிவு :

வைய நீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய வன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான் தழைத் தோங்குக.
தெய்வ வெண்திருநீறு சிறக்கவே — 54.
வெள்ளானைச் சருக்க முற்றும்
திருச்சிற்றம்பலம்
ஆகத்திருவித்தம் 4208.

காலம் :

நந்தன வருஷம் ஆனி மாதம் 30-ந் தேதி புதன்கிழமையும் சதுர்த்தேசியும் (மக) நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் குலசேகர பட்டண ராமநாதபிள்ளை குமாரன் மயிலேறும் பெருமாள் கையெழுத்து

திருமுறைகளில் 12-வது ஆகும். இறைவனே 'உலகலொம்' என்று அடியெடுத்துக் கொடுக்க சேக்கிழார் பாடியது. பிற செய்திகளை சுவடி எண் 252-c/D-853-ல் காண்க.

இடையிடையே ஏடுகள் ஒடிந்துள்ளன. இது ராசவல்லிபுரம் செப்பறை மடத்துச் சுவடி.



வரிசை எண் : 4265 சுவடி எண் : 1917-a

## சூடாமணி நிகண்டு 11-ஆவது தொகுதி

ஏடுகள் : 48 கி. எண்ணிக்கை : 25(0 அளவு : 35×4 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : வீரைமண்டல புருடர் பொருள் : நிகண்டு

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்நன்றாக் குருவே துணை
பொன்னும் நன்மணியு முத்தும்
புனைந்தமுக் குடை நிழற்றல
மின்னுபூம் பிண்டி நீழல்
வீற்றிருந்தவனை வாழ்த்தி

மன்னிய நிகண்டு சூழ(ா)
மணியென வொன்று சொல்வே
னின்னிலந் தன்னில் மிக்கோர்
யாவரு மிருந்து கேழ்மின்

முடிவு :

மின்னன வொருசொற் பலபேர்க் கியற்கவி முன்னூற் றொன்பான்
சொன்னவன் குணயத்திரன்றாள் சூடுமண்டலவன்றானே ! — 18
னகாவெதுகை முற்றும். ஆக எதுகை 18-க்குக்கவி. 309
காப்புக்கவி—1. ஆக 310. குருபாத முன்னிற்க

காலம் :

1018-ம் வருஷம் சித்திரை மாதம் 20-ந் தேதி சோமவாரம் அன்றைக்கு நிகண்டு எழுதி முகிந்தது முற்றும் அழகிய நடராசமூர்த்தி பாதார விந்தமே கெதி.

சிதம்பரம்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 938/D-1096 போன்றது.



வரிசை எண் : 4266 சுவடி எண் : 1917-b

# சூடாமணி நிகண்டு 11-ஆவது நிகண்டு உரையுடன்

ஏடுகள் : 110 கி. எண்ணிக்கை 3600 அளவு : 34 × 4 செ மீ.
பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : வீரைமண்டல புருடன் பொருள் : நிகண்டு
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவே துணை
பதினோராவது நிகண்டு

பொன்னுநன் மணியு முத்தும் ............ மிருந்து கேள்மின்

நூல்

பகவனே யீசன் மாயோன் பங்கையன் சினனே புத்தன்
பகவனென்பது ஈசன் சிவன், மாயோனென்றது விஷ்ணு
பங்கைய னென்றது பிரமன்

முடிவு :

மின்னன வொருசொல் பல்பேர்க்
கியற்கவி முன்னூற் றொன்பான்
சொன்னவன் குணபத்திரன் றாள்
சூடுமண் டலவன் றாளே ! — 13

காலம் :

1018-ம் வருஷம் பங்குனி மாதம் 23-ந் தேதி குரு சுவாமி எழுதி வருகிற நிகண்டு 15-ஆம் ஏடு முதல் எழுதினது.

குறிப்பு :

இது உரையுடன் அச்சாகியுளது முன்பிரதி போன்றது.



வரிசை எண் : 4267 சுவடி எண் : 1918

## சிவஞான சித்தியார் பரபக்கம், சுபக்கம்

ஏடுகள் : 126 கி. எண்ணிக்கை : 7000 அளவு : 31×4 செ.மீ. பக்கத்திற்கு: 12 வரிகள் ஆசிரியர் : அருணந்தி சிவாச்சாரியர் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : மிகப் பழுது முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

......... தென்றலிற் மாவுள தென்றது
எவற்றினையு மன்றன்றே ... ... ... ... ...
.........ளதாதலினது வேயவ்வாற்மா வென்றது
அன்றன்றே நின்றனைத்தும்

முடிவு :

சிவத்தே யாழ்க்கு மணுவை யிருளான்து தீர்வின்று — 41
............ சேதியா மும்மலமும் தீர்வாம் .........
............ ............

குறிப்பு :

இதில் தொடக்கம் முடிவு ஏடுகள் இல்லை, தலைப்புகள் முறிந்துள்ளன. இடையிடையே ஏடுகள் இல்லை. ஆசீவகன், பட்டாச்சாரியன், பஞ்சராத்திரி, மு லான தலைப்புகள் உள்ளன 260-ஆம் ஏட்டில், சிவஞான சித்தியார் பரபக்கம் முற்றும். பின் பக்கம் சுபக்கம் முதற்சூத்திரம் என்றுளது.

இது எமது சுவடி எண் 544/D-736 போன்றது.



வரிசை எண் : 4268 சுவடி எண் : 1919-a

# சிவபுராணத் தகவல் முதலியன

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 24 × 5½ செ.மீ.

பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : மாணிக்கவாசகர் பொருள் : திருமுறை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம் பலம்

நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க
யிமைப்பொழுது மென்னெஞ்சி நீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
வாகம மாகுநின் றண்ணிப்பான் றாள் வாழ்க,

முடிவு :

புகவே தகேனுனக் கன்பருளா யானென்
பொல்லா மணியே
தகவே யெனையுனக் காட்கொண்ட
தன்மையைப் புன்மையரை
மிகவே யுயர்த்தி விண்ணோரைப் பணித்தி
யண்ணா வமுதே
நகவே தரு மெம்பிரா னென்னை
நீ செய்த நாடகமே ! — 10

குறிப்பு :

இவை திருவாசகத்தின் ஒரு பகுதி, முதல் மூன்று அகவல்கள், திருச்சதகத்தில் 10 பாடல்கள் மட்டுமே உள்ளன. கூந்தற்பனை ஏடுகளாலானது,

வரிசை எண் : 4269 சுவடி எண் : 1919-b

# ஞான வாசிட்டம்

ஏடுகள் : 131 கி. எண்ணிக்கை : 12000 அளவு : 24×5½ செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : வீரை ஆளவந்தார் மாதவபட்டர் பொருள் வேதாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம் ஞானவாசிட்டம்
பாயிரம்

பெண்மை பாதியன் பெற்ற களிற்றினை
யண்மை தூரமற வகத்துன் னுவாந்
திண்மை ஞானச் சிறப்புயர் வாசிட்ட
முண்மை யாக வொருங்குரை செய்யவே

முடிவு :

யாள வந்தான் வீரைவின் மாதவப்பட்ட
னங்கிசவ வதாரமாகி
மீள வந்தான் வந்து தமிழ் வசிட்ட
ராமாயணமும் விளம்பினானே !
ஞானவாசிட்ட முற்றும்
சம்பூரண சின்மயம் சச்சிதானந்த குருமயம்

குறிப்பு :

இது. எமது சுவடி எண் 135/652, எண் 937/D-1225 போன்றது. இதற்கு வசிட்ட ராமாயணம் என்ற பெயரும் உண்டு. இது உரையுடன் அச்சிடப்பட்டுளது,

இதற்கு முதல் ஏட்டில், இந்நூலின் அட்டவணையும், 2-ஆம் ஏட்டில், "வேகமா நெறி சேரும்" எனத்தொடங்கி, "போற்றல் செய்வாம்" என்பது முடிய பாடல்கள் உள்ளன. இது, கூந்தற்பனை ஏடுகளாலானது.

வரிசை எண் : 4270 சுவடி எண் : 1919-c

# மகாவாக்கியம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 400 அளவு : 24 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு: 16 வரிகள் ஆசிரியர் : (விநாயகபாரதி) பொருள்: வேதாந்தம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம நன்றாக

உலக முதற்பொருளை யும்பர்க் குணர்வரிதாம் பொருளை
யோதிய வேதாகமத்தி னுச்சியி னுட்பொருளைப்
பலகலையின் பொருள் முடிவின் முடிவான பொருளைப்
பத்தர்ப் பத்திய பெரியோர் பரவிய வான்பொருளை

முடிவு :

எனைவளர்க்குந் தொட்டிலாகி உத்தகுரு
ராயனெங்கள் வினாயக பாரதி தமியே
னுள்ளத்தானே ! — 51

மாகவாக்கியந் திஷாகாரியக்கவி முற்றும்
சம்பூரண சின்மயம் சச்சிதானந்த குருமயம்
வேதாந்த வாக்கியே சுவராள் கிருபா கடாட்சம்
முன்னிற்க

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 1173/D-1780 போன்றது.
கூந்தற்பனை ஏடுகளில் எழுதப்பட்டுளது.



வரிசை எண் : 4271 சுவடி எண் : 1919-d

# மாகவாக்கிய பனுவல்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 400 அளவு : 24 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

முமுட்சுவாய் மோட்சம் வேணுமென்ற
பேர்களுக்கு வாக்கியார்த்தம் விசாரம்
பண்ணி மோட்சத்தை யடைய வேணும்
வாக்கியந்தா னேது வாக்கியார்த்தப்
பிரகரணந் தானார் பண்ணினா ரென்றால்

முடிவு :

நிற்குண பிரம்மத்தையும் பிரம்மமென்று சொல்லுகிறது
காணப்பட்ட தெல்லாம் மழியப்பட்டுப் போகையினாலே
இந்தமூன்றுக்கும் பிரம்மத்துவங் கூடாது. நிற்குணப்
பிரம்மமே பிரமம் மென்று மகாவாக்கியப் பிரகரணம்
சமாப்தம். பரமசிவம் சச்சிதானந்த நித்திய பரிபூரணச்
சுயம்பிரகாச தெட்சிணாமூர்த்தி சுவாமி திருவடி வாழ்க
சிவய குருவே நம. ஹம்சிவோஹம் திருச்சிற்றம்பலம்
வாணி நமஸ்து. தேவி நமஸ்து

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 1006-b/D-1781 போன்றது.

இது. கூந்தற்பனை ஏடுகளாலான சுவடி



வரிசை எண்: 4272 சுவடி எண் : 1919-e

## உபநிடத சொரூபானந்தம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை: 1300 அளவு : 24 × 5½ செ.மீ.

பக்கத்திற்கு: 17 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள்: வேதாந்தம்

நிலைமை : பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மெய்யுடைய வடியார்மேல் விருப்புடையான்
கருப்பூர விளக்குப் போலென
பொய்யுடைய யிருளகற்றும் பொருளுடையா
னருளுடையான் பொறிவைந்தாலும்

முடிவு :

முப்பத்திரண்டு செய்யுளாக அருளாகிய
அகத்திலிருந்து சொன்ன வதிசய மெவ்
வதிசயமோ தெரியப்படுகிலே னென்றவாறு
சொரூபானந்த உபநிடத முற்றும்.
சற்குரு கிடாட்ச முண்டாக
சின்மயம்

குறிப்பு :

இது, வேதாந்த நூல் உபநிடதத்தின் தன்மையினைக் கூறுகிறது.

இது, கூந்தற்பனை ஏட்டுச் சுவடி



வரிசை எண் : 4273 சுவடி எண் : 1919-f

# உபநிடத சொரூபானந்தம்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 24 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மெய்யுடைய வடியார்மேல் விருப்புடையான்
கருப்பூர விளக்குப்போ லென்
பொய்யுடைய வருட்ப் போதம்
பொருளுடையா னருளுடையான்

முடிவு :

நெஞ்சகத்தே சவுபாக்கிய குருவென்னும்
பொருளே தோற்று மருள் கத்தும்படி
யழுத்திதளே போலு மதனையொரு
வளியெண்ணான் காயகத்திலிருந்துரைத்த
வதிசயமே வதிசய மாறறிகிலேனே.

குறிப்பு :

இது, முன்பிரதி போன்றது. இதில் அதிக செய்திகள் கூறப்பட்டுள்ளன. இது, கூந்தற்பனைச் சுவடி



வரிசை எண் : 4274 சுவடி எண் : 1919-g

# குருசம்பிரதாயம்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 24 × 5½ செ.மீ. பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: வேதாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

விசுவாமித்திரரும் வதிஸ்ட்ட மாமுனியும்
நம்மைப் பிறவிக்கி வாராமல் ரட்சிக்கவேண்டி
ஞான மென்கிற பாதாரவிந்தத்தைத் தமக்கு

முடிவு :

விசுவாமித்திரரும் வஷிட்ட மாமுனியும்
என்னைப் பிறவிக்கு வாராமல் ரெட்சித்தார்கள்.
குருசம்பிரதாயம் முற்றும்
சற்குருபாதாரவிந்தமே கெதி

குறிப்பு :

இது, 'இனிப் பிறவாதிருக்கக் குருவின் கருணை வேண்டும்' என்பதைக் கூறுகிறது. இது, கூந்தற்பனை ஏடுகளைக் கொண்டது.



வரிசை எண் : 4275 சுவடி எண் : 1919-h

# கைவல்லிய நவனீதம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 600 அளவு : 24 × 5½ செ.மீ. பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக
பொன்னில் மாதராசை
பொருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னி லந்தரத்தில் சீவ
சாட்சிமாத்திரமாய் நிற்கும்

முடிவு :

தீர்த்த மெல்லா முற்றபே றடைவர் சால
நிலைபெறும் பெரியோர் பாத நிச்சைய
அருளைப் பெற்றுப்
பலகலை ஞான நூலைப் படித்த ஞானிகளாய்
வாழ்வார். — 110. கிஷ்ணசகாயம்
கைவல்லிய நவனீதம்
முற்றும்.

குறிப்பு :

இது, 186 செய்யுட்களையுடையது. இதில் 110 செய்யுட்களே உள்ளன. இது, எமது சுவடி எண் 882/D-1212 போன்றது. கூந்தர்பனை ஏடுகளைக் கொண்டது.



வரிசை எண் : 4276 சுவடி எண் : 1919-i

## சந்தேகந் தெளிதல்

ஏடுகள் : 1ட கி. எண்ணிக்கை : 1100 அளவு : 24 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

ஹரி ஓம் நன்றாக
நார்குளி பறித்து வெள்ள நாட்டிய
நெடிய கம்பமுர முறக் குற்றிக்குற்றி

உரைப்பிக்கு முபாயம் போலே
பரமமாஞ் சொரூபந்தன்னில்

முடிவு :

கைவல்லிய நவனீத நூலைக் கற்றோர்
பரகலை ஞான நூல்கள் படித்த ஞானி
களாய் வாழ்வார் — 185
சந்தேகந்தெளிதல் முற்றும்.
ஆகப்படல மிரண்டுக்குந் திருவிருத்தம் — 295
குருபாதமே கெதி

குறிப்பு :

இது, கைவல்லிய நூலின் பிற்பகுதி. அதிலுள்ள சந்தேகங்களைத் தீர்ப்பது.
கூந்தற்பனை ஏடுகளைக் கொண்டது.



வரிசை எண் : 4277 சுவடி எண் : 1919-j

# சொரூபசாரம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 700 அளவு : 24×5½ செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : அவிரோத மாமுனிவர் பொருள் : வேதாந்தம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிற்சொரூபந் தானே செகச் சொரூப
மானதெல்லாம்
தற்சொரூப சாரமாய்ச் சாற்றவே — பொய்ச் சொரூப
மச்சுருவாம் போலே யதுவதுவாய்த் தோற்றுமொரு
சொற்சொரூபந் தானே துணை.

முடிவு :

ஓுண்டிருக்க வல்லா ருலகமெல்லாந் தாமாகக்
கண்டிருக்க வல்லார்கள் காண்.

சிவமயம்.

சொரூப சாரம் எழுதினது முற்றும்.

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 1017-d/D-1752 போன்றது,
இது, கூந்தற்பனை ஏடுகளாலானது.



வரிசை எண் : 4278 சுவடி எண் : 1919-k

## சசிவர்ன்ன போதம் - உரையுடன்

ஏடுகள் : 16 கி எண்ணிக்கை : 1600 அளவு : 24 × 5½ செ.மீ.

பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : தத்துவராயர் பொருள் : வேதாந்தம்

நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

அலகை யச்ச மரமக வான்களு
முலகில் முத்தி டெரும்பரி சோதுவாம்.

என்றது.

பலபல சமைய பேதங்களிலே விழுந்து
ஞான மன்றி முடவிர்த்தியாய்ப்
பேய் போலே மயக்குற்று

முடிவு :

மானிடச்சட்டை தரித்து நம்பின்
பேரைத் தன்னைத் தானாக்க வந்த குருசொரூபமென்று
வேதங்கள் முறையிடுகு தென்ற றொறு — 109.

சசிவன்ன போத முற்றும்.

குருவே துணை.

குறிப்பு :

இது, அத்வைத விஷயமானது. இது, எமது சுவடி எண் 767-d/D-1241 போன்றது.
இது சசிவர்ண போதகம் எனவும் அழைக்கப்படும்.
கூந்தற்பனை ஏடுகள் கொண்டது.

வரிசை எண : 4279 சுவடி எண் : 1919-l

# பகவத்கீதை கிரந்தத்துக்கு டீகை

ஏடுகள் : 45 கி. எண்ணிக்கை : 4500 அளவு : 24×5½ செ.மீ.

பக்கத்திற்கு : 19 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள்: வேதாந்தம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக
முதலாவது அர்ச்சுன விச ரத்தியாயம்

ஒருபத மடித் தொருபதம் பொற்றேர் மிதித்
தொருகையிற் குசை கசை ஒருகை ஞானமாய்ப்
பொருகை வில்விசையனைப் பொருந்த நோக்கி மெய்
தருபொரு ளுளாதவர் சரணம் போற்று வாம்.

முடிவு :

ஸ்ரீகுருவினுட கிருபா கடாட்ச மாகிற
வழுற்த வருசம் வருசித்தாற்போலே
கீதையினுடைய வர்த்தஞ் சொல்லலாச் சுது

பதினெட்டாவது சகலோப நிஷத்து
சாரசங்கிரக சந் தெரிசனனம்
யோக முற்றும்.

முடிவு :

இது, பகவத் கீதைக்குப் பொருள் கூறும் நூல். இதன் ஏடுகள் கூந்தற்பனை ஏடுகள்.



வரிசை எண் : 4280 சுவடி என் : 1919-m

# பகவத்கீதை தாலாட்டு

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 400 அளவு : 24×5½ செ.மீ.

பக்கத்திற்கு : 19 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீராரும் பரமார்த்த தெரிசனத்தின் அருள் செய்ய
பேராரும் தேசிகனாம் பெருமானெற் சொன்னா
சீராக செரு சமரிற் பந்து சனச்சேதம் வருமென்றிகழ்ந்தே.

முடிவு :

அருச்சுனன்றன் பொருட்டாக வனைவருக்கும்
ஞானம்வரப் பொருந்திய தேசிக வடிவாம்
புண்ணியரே கணவன்றீர் — 101

திருச்சிற்றம்பலம்
பகவற்கீதை தாராட்டு
சற்குருபாதம் துணை.
செப்பறைமடத்துச் சுவடி

குறிப்பு :

பகவத்கீதைப் பாடல்கள் தாலாட்டாகப் பாடப்பட்டுள்ளன.

இது, கூந்தற்பனைச் சுவடி.



வரிசை எண் : 4281 சுவடி எண் : 1919-m

## அவதூத கீதை

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 500 அளவு : 24 × 5½ செ.மீ. பக்கத்திற்கு / 18 வரிகள் ஆசிரியர் : அனந்தமேரு சுவாமிகள் பொருள்: வேதாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக
முதலாவது ஆற்ம ஞான உபதேசப் பிரகரணம்

சற்றுத் தியாகியாய் சற்று போகியாய்
சற்று நிறுவாணியாய்ப் பசாசு போலே
சாட்சா அரிரூபமாய் யோகீசு
யோகீசுராளுக்கெல்லாம்,

முடிவு :

யெப்படிச் சொல்லப்பட்டுது அவர்
சொல்லவு மிவன் கேட்கவு மில்லை
அவதூத ரென்கின்ற பேரு மில்லை
கோரட்சக னென்கின்ற பேரு மில்லை
இந்தக் கீதையு மில்லை யென்றார்
சருவ சங்கற்பிதம் பிரம்மா காசம்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 996-c/D-1712 போன்றது. கூந்தற்பனைச் சுவடி.



வரிசை எண் : 4282 சுவடி எண் : 1919-o

## சிவஞானபோதம்-உரையுடன்

ஏடுகள் : 7 கி எண்ணிக்கை : 700 அளவு : 24 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு : 19 வரிகள் ஆசிரியர் : மெய்கண்டார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

முதலாஞ் சூத்திரம்
கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே 1.

நூல்

அவனவ ளதுவெனு மவைமூ வினமையிற்
றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்தமாதி யென்மனார் புலவர் ஏ து சூத்திர
மென்னுதலிற்றோ வெனின் சங்கார காரணனாயுள்ள
முதலையே முதலாக வுடைத்திவ் வுலகமென்பது

முடிவு :

எந்தை சனக்குமார னேத்தித் தொழவியல் பாய்
நந்தி யுரைத் தருளு ஞானநூல் — சிந்தை செய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாணியேபிர் தரமுணர
வேதுதிட் டாந்தரத்தா லின்று — 9

ஆக வெண்பா 83. பன்னிரண்டாஞ்சூத்திரமுற்றும்,
சிவஞான போத முற்றும் சின்மயம்.
பொன்னம்பலகுரு.

குறிப்பு :

இது எமது சுவடி எண் 945/D-1245 போன்றது. சைவ சித்தாந்த நூல்கள் பதினான்களுள் முதன்மையானது. கூந்தற்பனையாலானது.

★—★—★

வரிசை எண் : 4283 சுவடி எண் : 1919-p

# தாயுமானவர் கனவு

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 1●) அளவு : 24 × 5½ செ.மீ
பக்கத்திற்கு : 18 வரிகள் ஆசிரியர் : தாயுமானவர் பொருள் : தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கனவு கண்டேனே — சுகாதீதக்
காதல் கொண்டேனே
கஞ்சன் மால் காணாத கல்தலை கீழுங்
கலந்த யிடத்திலே மனது

முடிவு :

வந்து மிறந்து மயங்கித் திரியவும்
கேளாமலக் கேள்க்கவுங் காணமற் காணகவுங்
கேவல சுத்தஞ் சகல மசத் தென்றும்
கனவு கண்டேனே சுகாதீத காதலங் கொண்டேனே,
ஞானக்கனவு முற்றும்

குறிப்பு :

கனவில் சிவதரிசனங்கண்டதாகக் கூறப்பட்டுளது.
கூந்தற்பனை ஏடுகள்.



வரிசை எண் : 4284 சுவடி எண் 1919 : -q

## சற்குருகடாட்சம்·ராகத்துவேஷம்

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 24 × 5½ செ.மீ

பக்கத்திற்கு : 19 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்

நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ராகம் துவேஷம். காம குறோதம்
லோபம் மோகம் மதம் மாச்சிரயம்
யீரிசை யசூயை டம்பம் கற்பம்
அங்கங்கரம் ஆக 13.

முடிவு :

சச்சிதானந்த சொரூப மாயிருக்கிற பரமாற்மாவே
தானென்று யெவன் கரதலாமலகம் போலே
அறியிறானோ அவனே சீவன் முத்த னென்று
வேதாந்த சித்தாந்தம்.
சற்குருபாதார விந்தமே கெதி.
குருகமலம் பரமானந்தம்

குறிப்பு :

இதில், சாதனை சதுஷ்டயம், சமாதிலட்சணம், தத்துவ நிருபணம், சூட்சும சரீரம், காரணசரீரம், சிவபேதம், யீஸ்பர பேதம், குணத்திரைய பேதம், துரியசரீரம், அபவாதம், பதார்த்த லட்சணம், வாக்கியார்த்தம், விட்டலட்சணை, விடா லட்சணை, விட்டு விடர லட்சணை, பரமாத்மா வினுடைய சச்சிதானந்த லட்சணம். பிரபஞ் லட்சணம் ஆகிய உள் தலைப்புகள் உள்ளன, கூந்தற்பனை ஏடுகளைக் கொண்டது.

வரிசை எண் : 4285 சுவடி எண் : 1919-r

# தேவி காலோத்திரம்-உரையுடன்

ஏடுகள் : 22 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 21×5½ செ.மீ

பக்கத்திற்கு: 18 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

வானவர் தலைவரிந்த மன்னுயிர் முத்தி யெய்த
வானவ ரசரா ஞான மருளினால் அருளென் றேத்தி
மானமா மயில்வே லொண்கண் மணமுலி குமுதச் செவ்வாய்
தேனமர் குழலா டேவன் திருந்தடி பணிந்து சொன்னாள்

எ.து. வானவர் தலைவர் பிரமா விஸ்ட்டுணுக்கள் முதலாகிய

முடிவு :

யினி சொல்லப் போற தேது. யிதல்லாமல் அன்னியமாயுள்ளது.
இது கேட்க வுத்தேசிக்கப் படுகிறீரென்று பரமசிவன் திருவுளம்
பற்றினாரென்ற வாறு — 69

தேவி காலோத்திர ஞான
முற்றும்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 541-k/D-698 போன்றது. சைவசித்தாந்த உண்மையைக் கேட்ட பார்வதி தேவியாருக்கு பரமேசுவரன் உபதேசித் தருளியது. உரையுடன் அச்சிடப்பட்டுளது. இது. கூந்தற் பனைச்சுவடி.



வரிசை எண் : 4286 சுவடி எண் : 1919-s

# வாக்கிய சம்பிரதாயம்

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 24×5 செ.மீ

பக்கத்திற்கு : 18 வரிகள் ஆசிரியர் : தெட்சணாமூர்த்தி பகவான் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஹரி ஓம் நன்றாக

தெட்சணாமூர்த்தி பகவான் சனகாதியளுக்குப் போதிச்ச
வாக்கிய சம்பிரதாயம். சனகர், சனந்தனர்.
சனாதனர், சனத்குமாரர். குருகமலம் பரமானந்தம்
முகவிலாசத்திலே எழுந்தருளி யிருக்கப்பட்ட
தெட்சணாமூர்த்தி பகவானினது அனுக்கிரகத்தினாலே

முடிவு :

பிரமானந்த சுவாமி, பின் அமுர்தானந்த சுவாமி,
பின் சவுபாக்கிய சுவாமி, வயிந்த வானந்த சுவாமி,
யென்றதிக வாக்கிய சம்பிரதாயமு மிந்த சாஸ்த்திரம்
வரலாறுங் குரு பாரபரியமுஞ் சொல்லப்பட்டுளது.

சற்குரு கிடாட்சம், குருகமலம் பரமானந்தம்

குறிப்பு :

இது, கூந்தற்பனை ஏட்டுச்சுவடி. திருமடத்தின் பரம்பரையும் கூறுகிறது.



வரிசை எண் : 4287 சுவடி எண் : 1919-t

# பிரமானுபவ விவேக சமுத்திரம்

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 24×5 செ.மீ

பக்கத்திற்கு: 17 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்

நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

முதலாவது திஷ்டாந்திரப் பிரமாணம்

பிரம்மமே சற்றியம் நாமறூபாதிகமாய்
தோணுகிற தேவாதிரியற்கு நாரள கிறுமி
யன தாபரங்கள் பஞ்ச பூதங்கள்
முதலான

முடிவு :

பூரணாகத தேகமா யிருக்கப்பட்ட
சீவன் முத்தியே விவேக முத்தி.
இப்படிச் சீவன் முத்திப் பிரகரணஞ்
சொல்லப்பட்டுது.
பிரமானுபவ விவேக சமுத்திரம்
முற்றும்
சச்சிதானந்த சற்குரு கிடாட்ச முண்டாக வேணும்.

குறிப்பு :

இதில், பிடனூசி திஷ்டாந்தம், கடதிபதிஷ்டாந்தம், சூரிய திஷ்டாந்தம், சந்திர திஷ்டாந்தம், நக்ஷத்திர திஷ்டாந்தம், சிது திஷ்டாந்திரம், சட செல திஷ்டாந்திரம் முதலான தலைப்புகள் உள்ளன கூந்தற்பனைச் சுவடி.



வரிசை எண் : 4288 சுவடி எண் : 1919-u

# மகாவாக்கிய சுருதி வாக்கியம்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 800 அளவு : 24 × 5½ செ. மீ.

பக்கத்திற்கு: 18 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக
சுருதி சாரத்திறவு

தேசிகன்றன் னடிவணங்கிச்
சுருதிசாரத் திரனுரைப்பரஞ் சுரர்க்குப
தேசித்திடும் வாக்கியங்கள் மாசிற்
பிரபஞ்சமதே பிரமோக யோக

முடிவு :

பொருளை யறிந்தொருகாற் கேட்டாலுந்
தெருண்டவர்க்கு வரமுதவு மெய்ஞ்
ஞானி யாவதினால் முத்தி யிங்கே
வருவதாமே.
அதிகாரம் பனிரெண்டுக்கும் விருத்தம் 122,
குருகிடாட்ச முண்டாக

குறிப்பு :

இது, வேதாந்த ஞானங்கூறுகின்ற கூந்தற்பனைச்சுவடி.



வரிசை எண் : 4289 சுவடி எண் : 1919-v

# ஆற்மா விவேகம்

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 100 அளவு : 24 × 5½ செ.மீ. பக்கத்திற்கு : 18 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் வேதாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்: நன்றாக

சறுவாபீஷ்டமுங் கொடுக்கிறவராயும்
யானைமுகத்தை யுடைத்தானவராயும்
பார்பதிக்குக் குமாரராயுஞ் சகல தேவதையளாலே
வணங்கப்பட்ட வராயும்

முடிவு :

அத்துவிதப் பிரம்மமாக மோட்சத்தை
யடைவானென்று அறியவேணு
மென்றுத்தாரம். —68

ஆற்ம போதகப் பிரகரண முற்றும்
சற்குரு கிடாட்சம் உண்டாக

குறிப்பு :

இதுவும், கூந்தற்பனைச்சுவடி. வேதாந்தம் பற்றிக் கூறுவது



வரிசை எண் : 4290 சுவடி எண் : 1919-w

# புவனகலைக்கியான தீபம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 250 அளவு : 24×5½ செ.மீ

பக்கத்திற்கு : 18 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

உரைக்கும் பனுவ லிங்கென செயலல
வுரையிரந்து குருக்குஞ்சிவானந்த
போதகத்தை யீதெனக் கூறினார்

முடிவு :

தீராத வல்வினைதீர்த்துக் குருவின்
திருவுருக் கொண்டா ராத யின்ப
சுகாதீதம் நல்கின னம்பிகையே — 50.

புவனீசுவரி சரணம்

குருபாத முன்னிற்க

குறிப்பு :

புவனத்தின் திறம் கூறுவது. கூந்தற்பனைச் சுவடி



வரிசை எண் : 4291 சுவடி எண் : 1919-x

# தாயுமான சுவாமிகள் பாடல்

ஏடுகள் : 23 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 24×5½ செ.மீ.

பக்கத்திற்கு : 18 வரிகள் ஆசிரியர் : தாயுமானார் பொருள் தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக
சிவகுரு வணக்கம்

அங்கைகொடு மலர்தூவி
யங்கமது புளகிப்ப வன்பினா
லுருகி விழி நீராறாக வாராத
முத்தியினதா வேசை யாசைக் கடற்குளமுழ்கிச்
சங்கர சுயம்புவே

முடிவு :

நிகரில் பசுபதியான பொருளை
நாடி நெட்டுயிர்த்துப் பொன்பர
நினைதல் செய்வாம் —12

ஆகவதிகாரம் பதிமூன்றுக்குச் செய்யுள் 131
சின்மயம் சச்சிதானந்த குருமயம்

குறிப்பு :

இது, தாயுமானாரின் பாடல்களில் ஒருபகுதியினைக் கொண்டது. கூந்தற்பனைச் சுவடி.



வரிசை எண் : 4292 சுவடி எண் : 1919-y

# வேதாந்த சூடாமணி

ஏடுகள் : 22 கி. எண்ணிக்கை : 200 அளவு : 24 × 5½ செ.மீ.

பக்கத்திற்கு : 18 வரிகள் ஆசிரியர் : துரைமங்கலம் சிவப்பிரகாசர் பொருள் வேதாந்தம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து: தமி

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

தருணமா துமைமுகத் தாமரைக் கெழு
மருண னாமென வுதித்தடியர் பாற்புரி
கருணை மாமத மெனக்காட்டு மாமுகன்
சரண வாரிச மலர் தலையிற் கொள்ளுமாம்.

முடிவு :

தடுப்பரிய பிறவிநோய் தணிப்பதனுக் கெண்ணி
யாதரவி னருட்குரவன் றனைத் தேடி யுருகு
மன்புடையோர் தமைக்காணின் றளித்திடுக் வுவந்தே. —184

வேதாந்த சூடாமணி எழுதி நிறைந்தது முற்றும்.
சின்மயம்

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 290-e/D-500 போன்றது.

கூந்தற்பனை ஏட்டுச் சுவடி.



வரிசை எண் : 4293 சுவடி எண் : 1919-z

# சிவ வாக்கியம் — தத்துவக்கட்டளை

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 500 அளவு : 24 × 5½ செ.மீ

பக்கத்திற்கு: 18 வரிகள் ஆசிரியர் : சிவவாக்கியர் பொருள் : சித்தாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடககம் :

ஹரி ஓம் நன்றாக

பிரசாத மாவது காணப்பட்ட
நாமரூப செகத் தெல்லாங்
கொடி திரிச்சுக் கொண்டு
சருவ சொரூப முந்தன்னுடையரூ பமும்.

முடிவு :

தியானித்துச் சிவம் பண்ணிவரப் பாவந் தேய்ந்து
இருவினை யொப்புவந்து சாயுச்சிய பதமடையலாம்
இது பிரமவித்தை. குரு சம்பிரதாயம்.
திருச்சிற்றம்பலம். சட்டைமுனி:

பாளான சாத்திரத்தில் ஞான முண்டோ
பணியாத மூடருக்கு வாத முண்டோ
கோளான திருடருக்குச் சத்தி யுண்டோ
கொடியதொரு பாதவர்க்குக் குளிகை யுண்டோ

தோஷமான பாவிக்கு மோட்ச...........
டி. செல்ப மெடுப்பார் பாரே !

குறிப்பு :

இதில், தத்துவம் கூறப்படுகிறது. ஆனால் பாடல்கள் வெவ்வேறாக உள்ளன.

கூந்தற்பனை ஏடுகள். இடையில் தேவாரம் என்ற தலைப்பு உள்ளது. ஆனால் தேவாரம் இல்லை.

× ××× ×

வரிசை எண் : 4294 **சுவடி எண் : 1919-:-1**

## சிந்தனை

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 700 அளவு : 24 × 5½ செ.மீ.

பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: வேதாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் நன்றாக

சிவத்துக்குள்ளே நின்ற பொருளு மடங்கின முறமை
சிவன் வியாபகன் அவனுட சிவசக்தி வியாப்பிய
மதனு ளாற்றுமா வியாப்பிய மதனுளாற்றுமா

முடிவு :

அனிப்பொருள் நான்கு பொய்ப்பொருள்
பலம் ஞாதுறு ஆற்மா ஞானம்
ஆற்மாவினுடைய குணம் நேயம்
அறியப்படும் பொருள்.

சிந்தனை முற்றும்.
சற்குருவே நமஸ்த்து

குறிப்பு :

இது, ஆத்மாவைப் பற்றிய விளக்கத்தைக் கூறுவது.

கூந்தற்பனைச் சுவடி.



வரிசை எண் : 4295 சுவடி எண் : 1919-z-2

# இந்திர சாலத்திரட்டில் ஞான சூத்திரம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 3(0 அளவு : 24 × 5½ செ.மீ

பக்கத்திற்கு : 17 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

காப்புயர்ந்த சிவன் காப்பு
மணித்தாய் காப்பு
கருணை தருஞ் சதாநதி கழலே காப்பு
காப்புயர்ந்த சனகாதி சித்தர் காப்பு

முடிவு :

தூங்காதே ஞானவளி யோகம் பாரு
சொல்லிவிட்டேன ஞானமுப்பத்தி மூணுமுற்றே
குருவே துணை
பொதியசால தெய்வ மிரங்கி லட்சிக்க

காலம் :

ஸ்ரீமுக வருஷம் அற்பிசி மாதம் 2-ந் தேதி

குறிப்பு :

இதில், ஞான மார்க்கம் பேசப்படுகிறது. கூந்தற்பனைச் சுவடி.



வரிசை எண் : 4296 சுவடி எண் : 1919-z-3

# ஆறாதார தெரிசனை

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 24 × 5½ செ.மீ.

பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருநந்தீசுரர் ஆதிவள்ளுவ நயினார்
சாட்சியாக திருமூல தேவருக்கு
அனுக்கிரகஞ் செய்த ஆறாதார
தெரிசினை. மூலாதாரஞ் சுவாதிட்டான
மணிபூரகம், அனாகதம் விசுத்தி ஆக்கினை
ஆறாதாரம் — 6

முடிவு :

உடலை நீக்கி யறிபவர் தமை யறிந்தோர்
சொல்லிய பேர் தவறாதன சொற் பெரியோரை
யெல்லாம் எல்லையில் சிவத்தைச் சேர்ந்தா
ரினியொரு துன்பமுண்டோ — 14

ஆறாதார தெரிசனை முற்றும்
குருபாதந்துணை

குறிப்பு :

இது, சரீரதத்துவமாகிய ஆறாதார விளக்கம் கூறுவது. கூந்தற்பனைச் சுவடி,



வரிசை எண் : 4297 சுவடி எண் : 1910-Z-4

## வயிராகதீபம் திருவிழா

ஏடுகள் : 4 கி எண்ணரிக்கை : 400 அளவு : 24×5½ செ.மீ.
பக்கத்திற்கு :18 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம்
நிலைமை : நல்ல நிலை நிலைமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக
தாயினுமிரங்கி யென்றனை
வந்தாண்டரு டுயவன்
சரணையே சுமக்க வென்றலைவாய்
துதி செய்க கரமலர்கடுய்த் தொழ

முடிவு :

பிணியறா விடத்தும் விடலரும்
பசிநோய் காமநோய் தணிப்பான்
குருபொருட்டெடுத்து யரீண்டடையினு
மதனைக் காக்குத றுயர் வேந்தாயினு
மிருனராற்றுயரே.

என்றது. இந்த உடலானது .........

குறிப்பு :

தலைப்புடன் தொடர்புடையதாயின்றெனினும் வேத விசாரம் கூறுகிறது. கூந்தற்பனைச் சுவடி.



வரிசை எண் : 4298 சுவடி எண் : 1919-Z-0

# ஆசாரி சுவாமிகள் வாத்திம சங்கற்ப நிராகரணம்

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 600 அளவு : 24 × 5 செ.மீ: பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : சவுபாக்கிய சுவாமிகள் பொருள் : சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி: ஓம்
சங்கரா சாரிய சுவாமிகள் கலைக்கியான
மேறுகயில் வந்து கண்டித்த பரமவாதிகள்
சங்கைக் குத்தரம்.

அகண்ட பரிபூரணமாயிருக்கும்
பிரம்ம மென்னிலந்தகார வடிவான
அவித்தை பொருந்தி

முடிவு :

சத்தியமான படியினாற் சொருபத்திற் கானியில்லை
யென்றுந்தரம் — 78.
சவுபாக்கிய சுவாமிகளாற் சொல்லப்பட்ட
சங்கற்ப நிராகரணம் முற்றும்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 541-g/D-694-ன் வேறாயது. தலைப்புக்கும் முடிவுக்கும் வேறுபாடு காணப்படுகிறது. இது கூந்தற்பனைச் சுவடி.

இதன் பின்னர் 2 உதிரி ஏடுகள் காணப்படுகின்றன.



வரிசை எண் : 4299 சுவடி எண் : 1920-a

# திருத்தொண்டத் தொகை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு ; 29 × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : சுந்தரமூர்த்தி நாயனார் பொருள் : திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்: நன்றாக திருச்சிற்றம்பலம்

தில்லைவா ழந்தணர்தம் மடியேன் மடியாக்கு
திருநீலகண்டத்துக் குயவனார்க் கடியே
னில்லையே யென்னாத யியற்பகைக்கு மடியே
னினையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்

முடிவு :

கடல்சூழ்ந்த வுலகெல்லாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாம் செருத்துணைத னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதழ்மே லரவாட வாடிப்
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கும் .........

குறிப்பு :

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திரு ஆரூரில் அடியார் திருக்கூட்டங் கண்டு வணங்கிப் பாடியது இது. பெரிய புராணம் பாடுவதற்கு முன்னோடியாக இருந்தார், இது இப் பெரியபுராண நூலின் முன்னர் கூறப்பட்டது.

வரிசை எண் : 4300 சுவடி எண் : 1920-b

# திருத்தொண்டர் புராணம் (பெரியபுராணம்)

ஏடுகள் : 344 கி. எண்ணிக்கை : 12500 அளவு : 29 × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : சேக்கிழார் பொருள் : திருமுறை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

ஹரி: ஓம் நன்றாக

திருச்சிற்றம்பலம்

வேகமா நெரிசேரும் .............. போற்றுவாம்-
தவளத் தாமரை ............ குறித்தே.

திருமலைச் சருக்கம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்,

முடிவு :

வைய நீடுக மாமழை மன்னுக
மெய்விரும்பிய வன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான் தழைத் தோங்குக
தெய்வ வெண் டிருநீறு சிறக்கவே — 56.

வெள்ளாளைச் சருக்க முற்றும்.

ஆகத் திருவிருத்தம் ............

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

63 நாயன் மார்களுடைய வரலாற்றினைக் கூறுவது இது, எமது சுவடி எண் 1151/D—1805 போன்றது.



வரிசை எண் : 4301 சுவடி எண் : 1921-a

# சந்திரகாவியம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 500 அளவு : 38½ × 3½ செ மீ

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நன்றாக

அஞ்சொன்பதுக் கதிபர் — பாவி சுபரானசலு
மஞ்சு பலன்றருவா மென மூன்றா
ரெஞ்சு பதினொன்றுக் கதிபதியு மிப்படியே

முடிவு :

செவ்வாய் லக்கினத்துக்கும் சந்திரனுக்கும்
முழுப்பாவம் சுக்கிரனுச் செவ்வாயு
நின்றபாவமும் லெக்கினம் சந்திர
லக்கினங்களுக்கு ராகு கேது குளிகன
சனிநிற்கின்ற பாவமு மரையாகவுஞ் சுபர்கள்
பார்த்தால் காலாகவுங் கொள்ள.

குறிப்பு :

இதில், லக்கின பலன் கூறப்பட்டுளது, முன் ஏட்டில் 'உள்ள முடையான்' என்ற தலைப்பு காணப்படுகிறது. பின்னர் சோதிடம் எழுதிய ஏடொன்று உளது.



வரிசை எண் : 4302 சுவடி எண் : 1921-b

# பலவுக்கும் பிலக்கப்பட்ட ராசி

ஏடுகள் : 61 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 38½ × 3½ செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கெவ்வக்காமா மேறறி வில்லை
யேடுமுகடு வாச்சிதானே ! என்பது
அசுபதி முதல் நாட்களும் மூல முதல்
நாலு நாட்களும் 1 முதல் நாலுநாளும்
இவை மேனோக்கின நாட்கள்.

முடிவு :

மூன்றாஞ்சாமம் தன் புதன் ஒன்றே பட்சம்
குரு பதினெண்முக்கால் பகற் புகற்
பதினொண்ணேகால் துதிபெறு சனி
யோற் சாமம் தோன்றுமே ராகுக்காலம்.

குறிப்பு :

இது, 41-ஆம் ஏட்டில் தொடங்குகிறது, இது, உள்ளமுடையானின் நடுப்பகுதியா என்பது ஐயம்.



வரிசை எண் : 4303 சுவடி எண் : 1921-c

## கோளுறுமாலை

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 38½ × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

உரைத்தமுன் னூல்கட் கெல்லா
முண்மையாய் விளங்கும் போது
திருத்தமாம் ராசி காலம்
திடம்பட புதைத்த தெல்லாம்

முடிவு :

கடனுடைக் கலங்கள் தானும்
வானுடைப் புகரோன் வந்து
வக்குற நிற்கும் போது
தேனுறு மொழியா பூமி
அவனிக்குந் தீய் (மை) பை கூறே ! — 24.

கூறுவார் வெள்ளி நட்பில் ...........

குறிப்பு :

இது, கோள்களினுடைய இயக்கத்தைக் கூறுவது



வரிசை எண் : 4304 சுவடி எண் : 1921-d

## வருஷப் பலன்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : $38\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பிரபவ மழையுண்டுக் காமழை யுண்டு
மனுசத்தி வியாதி யுண்டு
பரிதாவிக்கும் அந்தப்படியே
விர்த்தியும் சுக்கிலத்துக்கும்
மழையுண்டு வெள்ளாமையுண்டு.

முடிவு :

ஆறு மாத்தைக்குப் பின்னையும்
இராசாக்களுக்கும் சுகமுண்டாம்
நல்லகாலம் மென்ற வாறு. — 50

குறிப்பு :

தமிழ் ஆண்டுகள் எனப்படும் பிரபவ முதலான 60 ஆண்டுகட்கும் பலன் கூறுவது. செய்யுட்கள் 60 இல்லை. வருடங்கள் சேர்த்தும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4305

சுவடி எண் : 1921-e

# வாக்கியத்துளுவம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 38½ × 3½ செ.மீ.

பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

........கியத் துருவ மென்றறிவது
விருத்தலம் இல்லையாகில் மண்டலத்திலே
அமுதலத்தைக் கலைந்து முன்புபோலே
செய்வதுக்கு

முடிவு :

மால்பாகன் — 19, ஈன்றாலம் — 20
பூனாகம் — 21, தேர்பாகன் — 2
ஐயாறன் — 23, மைஞ்ஞர்கள் — 24
ஆதித்தியன் மந்தச்சர முற்றும் — 397

குறிப்பு :

இது, ஒரு நூலின் கடைசிப்பகுதி 98—100-ஆம் ஏடுவரை உள்ளன.
பின்னர் சோதிட உதிரி ஏடுகள் 2 உள்ளன.



வரிசை எண் : 4306

சுவடி எண் : 1921-f

# லக்கின பலன்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 250 அளவு : 38½ × 3½ செ.மீ.

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

லக்கினத்தில் சூரியனிருந்த பலன்
ஆரோக்கியனாபத்திய தேகம் செகப்புக்

கண்ணுடையவன். அந்த சூரியன்
கடகத்திலிருந்தால் நேத்திர ரோகமாவான்

முடிவு :

11-மிடத்தின் பலன் புத்திராளுண்டு
மசறி சீவிக்கலா.........ப்பிரியன்
12-மிடத்தின் பலன் புத்திராள் மத்திபம்
நேத்திரரோகி. கேது ராகுபன் முற்றும்.

குறிப்பு :

பனிரண்டு வீட்டிலும் லக்கின முதலாக கோள்கள் நிற்கும் நிலைக்குரிய சோதிடம் கூறுகின்றது.

இதன் பின்னர் ஒரு சோதிட ஏடும், ஒரு தனிப்பாடல் ஏடும் உள்ளன.



வரிசை எண் : 4307 சுவடி எண் : 1922-a

# திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ்

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 800 அளவு : 34×2½ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : பகழிக்கூத்தர் பொருள் : பிள்ளைத்தமிழ்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக. குருவே துணை.

அத்தனையும் புன்சொல்லே யானாலும் பாவேந்த
ரெத்தனையுங் கண்டுமகிழந் தெய்துவார் — முத்தி
புரக்குமரன் றந்தகந்த புண்ணியன் முந்நான்கு
கரக்குமரன் பிள்ளைக் கவி.

நூல்

பூமா திருக்கும் பசுங்களபப் புயபூ தரத்துப் புருகூதன்
போற்றக் ககன வெளிமுகட்டுப் புத்தேள் பரவ

முடிவு :

சேறுமலை வாய்க்கு நாதா
தாலோ தாலேலோ

தேவர்சிறை மீட்ட தேவா தாலோ தாலேலோ! — 8.

அரவு சிறுபறை யிதழி திறிபதகை போதி சடையா பாலவேலா
அருணை வெயிலி ...........

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 456/D 311 போன்றது. அச்சாகியுளது.



வரிசை எண் : 4308 சுவடி எண் : 1922-B

# திருப்புகழ்

ஏடுகள் : 28 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 4×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அருணகிரியார் பொருள் : தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி: ஓம் நன்றாக, குருவே துணை,
முத்தைத்தரு பத்தித் திருநகை
யத்திக்கிரை சத்திச்சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர — வெனவேது
முக்கட்பர மர்க்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவருள்
முப்பத்து மூவர்க்கத் தமரரு — மடிபேண

முடிவு :

நிலவத்தரு மலைசெய் திருப்பதி யுறைவோனே
யடியவ ரிச்சையி லெவை யெவை
யுறறதை யவை தருவித்தரு— பெருமாளே! — 68

குறிப்பு :

இது, அச்சாகியுளது. பாடவேறுபாடுகள் உள்ளன.



வரிசை எண் : 4309 சுவடி என் : 1923-a

# சரசுவதி அர்ச்சனை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 10 அளவு : 34×4 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : கிரந்தம்.

தொடக்கம் :

அகோர சிவாச் சாரியார் பத்ததியிலிருந்து
எழுதி யிருக்கிறது
ஓம் மகா லக்ஷ்மியை நம
துர்காய நம
வாகீஸ் வரியை நம

முடிவு :

வாகியை நம
வாகீசுவரியை நம
காயத்திரியை நம
... ... ... ... நம
ஓம் சரஸ்வதியை நம.

குறிப்பு :

இது, கலைமகள் வழிபாடு; மலர் வழிபாடு முகப்பு ஏட்டின் பின்புற முள்ளது. முன்பகுதியில் இதில் உள்ள நூல்களின் பட்டியல் உளது.



வரிசை எண் : 4310 சுவடி எண் : 1923-b

# பஞ்ச கவ்விய விதி

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : $35 \times 3\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அகோரசிவனார் பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருமெழுக்காவிடம் பண்ணி
மூன்றதுக்கு ... ... ... ... க் கிழமேற்

றென்வடலாக நவகோட்டமாகத்
தெற்பை யா(ல்)ய்க் கீறி

முடிவு :

மத்திமம் ப. அதமம் 4
விதிபத்தாய் 3 கூட்டவும்
பஞ்சாமிர்தத்துக்கு வகை:-
பால் தயிர் நெய் பழுஞ்சர்க்கரை
கூட்டுகிறது

குறிப்பு :

பசுவிடத்தினின்றும் கிடைக்கக்கூடிய பொருள்கள் 5. பால், தயிர், நெய், கோமயம், சாணம் ஆகியவை. இவையே பஞ்ச கவ்வியம் எனப்படுகின்றது.



வரிசை எண் : 4311 சுவடி எண் : 1923-c

# ஆத்மலிங்கத்திற்கு அஷ்டபெந்தன விதி

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 80 அளவு : 35 x 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகோரசிவாச்சாரியார் பொருள் : சித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மூன்றுளுந் தழுந்த மருந்து
போந்துதானால் சொற்ணத்தாலாவது
இரசத்தாலாவது திரிபெந்தனமாவது
அஷ்டபெந்தனமாவது செய்வது

முடிவு :

விதிப்படி பூசிக்கவுமியன்ற மறியாதம்
பிராமண போசன மகேசுர பூசை
பண்ணவும்.

முற்றும்.

குறிப்பு :

இது, லிங்கங்களை, ஆவுடையாருடன் பொருந்தச் செய்ய 8 வகை மருந்துக்களைச் சேர்த்து இடித்து வெண்ணெய் துணையுடன் சார்த்துவது.

வரிசை எண் : 4312 சுவடி எண் : 1923-d

# தானிய முதலான பிட்சை விதி

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை : 20 அளவு : 35×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகோரசிவாசாரியார் பொருள் : சித்தாந்தம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தானிய முதலான திரவிய மெல்லாம்
அன்புடனே ஈவார் கை வாங்கி
யேற்றங் குறைச்ச லென்று கேளாமல்த்
தந்ததைச் சந்தோஷமாய் வாங்கிக் கொண்டு
வந்து சிவனுக் கொன்று சமைத்து

முடிவு :

சிவனைத் தியானம் பண்ணிச்
சார்தி யிருப்பது தானிய முதலான
திரவிய பிட்சை விதி

முற்றும்.

குறிப்பு :

இதில், தானியங்களைப் பிட்சை போடுவது பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன



வரிசை எண் : 4313 சுவடி எண் : 1923-e

# அரிசி பிட்சை விதி

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 80 அளவு : 35×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் சித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

அதிபாதகர், திதியர் பதிதர், வேசையர்
உடலிலிருப்பந்றார் வண்ணமுதலோர்
மனத்தினான் சீமந்தம் சிராத்தம் தன்
கணவனை விட்டுப் பிறர்முகம் பார்த்தான்.

முடிவு :

விதிப்படியே பொசித்துச் சிவனை
முன் சொன்ன விதிப்படியே
தியானிப்பது.
அமுதுபடி பிச்சை விதி முற்றும்.

குறிப்பு :

அரிசிக்கு 'அமுதுபடி' என்ற வழக்குச் சொல் உண்டு. அதன்படி அரிசி பிட்சை விதி எனத் தொடங்கி விதி முற்றும் என்றுளது.



வரிசை எண் : 4314 சுவடி எண் : 1923-f

## அமுது பிட்சை

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 80 அளவு : 35 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்
நிலைமை : பழுது முழுமை : முற்றமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

இரண்டு சந்தி சிவபூசை முடித்து
விரத்தா அமுதுப் பிச்சைக்குப்
பிறப்படுகின்ற பெயர் மிடையுடலின்
கூலிகுடுக்க நினைந்து ஆசாரியனை
வணங்கி

முடிவு :

தத்புருஷத்தாலே கொண்டு அந்த
யிரு கூறுங் குன்றாதே யேறாதே
யோசையில்லாமல் கொண்டு முன்
சொன்ன முறையுறவே முடிப்பது
அமுதுப் பிட்சை விதி முற்றும்

குறிப்பு :

இதில், சோறு பெறுதல், வழங்குதல் விதிமுறைகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 435 சுவடி எண் : 1923-g

# கரபாத்திர விதி-யாசக விதி

ஏடுகள் : 1½ கி. எண்ணிக்கை : 50 அளவு : 35 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அறவெறுத்தா ளாக்கையினை
அங்கை யேற்றுண்க
உறவும் பகையு மொழித்துக்
கடையெல்கை யேற்று

முடிவு :

வஞ்சகனுந் தந்தாவலன்
இரையருந்துங் காலத்தின்ங்
கூட்டுங் காக்கை கவர்ந்து
கானாரக கரண முற்றும்

குறிப்பு :

பிட்சையினைக் கையிலேற்றுண்பதற்கும், பாத்திரத்தில் பெற்றுண்பதற்கும் விதிகள் கூறப்பட்டுள்ளன.

வரிசை எண்: 4316 சுவடி எண் : 1923-h

# சயன விதி

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை: 10 அளவு : 35 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு: 3 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்

நிலைமை : பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

விரத்தி தெச்சின திக்கிலே
வைக்கச் சிரம்
இல்வாழ்வார்க்குப் பூருவ திக்கில்
வைக்கச் சிரம்

முடிவு :

அன்னிய கிராமத்தில் போனால்
பச்சிம திக்கிலே வைக்கச்சிரம்
வடதிசையில் வைக்கலருது
சயனவிதி முற்றும்

குறிப்பு :

இதில், யார்யார் எந்தெந்தத் திசையில் தலைவைத்துப் படுக்கவேன்று என்று கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4317 சுவடி எண் : 1923-i

# துவார பூசைத் தியானம்

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 400 அளவு : 35 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் சித்தாந்தம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

25-வது தொகுப்பு

தொடக்கம் :

கணபதிக்கு நீலநிறம் ஒருமுகம்
மூன்றுகண் நாலு கை
வலது யிரண்டிற் செபமாலையுந்
தந்தமும் இடதுகை யிரண்டிற்
குடாரமு மோதகமும் துதிக்கையுந்
தொந்தி வயறும்

முடிவு :

அபரநாத கலைக்கும் பரவிந்து கலைகளும்
பரநாத கலைகளும் பராச சத்திகளும்
ஆக சத்தி திரண்டது. இனி
மூர்த்தி மூலமானது பிறுதிவிமுதல்
சமனையீறாக வியாபிக்கும்
பரமசிவன் மூலம்

குறிப்பு :

கோயில் வாசலில் உள்ள விநாயகரைப் பூசிக்கும் முறை கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4318 சுவடி எண் : 1923-j

# விக்கினேசுபர பூசை

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 300 அளவு : 35×3½ செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் ஹாம் இருதாயாய நம்
ஓம் றீம் சிரசே சுவாகா
கங் சிகாயை வவுஷடு
கையிங் கவசாய உ மெளவனெதி

முடிவு :

கவசாயநம கௌம் நேத்திறத் திரையாய
வவுஷடு அஃம் அத்தராய பட்டு
ஓம் ஊங்சீங், அங் ஆங்
உங் ஆற்மனே நம

முற்றும்

குறிப்பு :

இதில், விநாயகர் பூசை, பஞ்சப் பிரம்ம மந்திர மூலம் பேசப்படுகிறது.



வரிசை எண் : 4319 சுவடி எண் : 1923-k

## கேதார பூசை மந்திரம்

ஏடுகள் : 1½ கி. எண்ணிக்கை : 50 அளவு : 35×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சித்தாந்தம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ரிஷபேஸ்வராய நம
கெங்காதராய நம வாமதேவாய நம
நடேசபராய நம சுரேசுராய நம
சங்கராய நம வரப்பிரதாய நம.

முடிவு :

நாலங்குலம் முடிச்சு இரண்டங்குலம்
பின் புறம் பன்னிரண்டங்குலம் தெற்பை
மூப்பத்தாறு உத்தமம். இருபத்தஞ்சு
பதினாறு ஒன்பது ஆம்.

குறிப்பு :

கேதாரநாதரைப் பூசிக்கும் முறையும், மந்திரங்களும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4320 சுவடி எண் : 1923-l

# சரசுபதி பூசை அட்டவணை ஆயுத பூசை

ஏடுகள் : 4+1½ கி. எண்ணிக்கை : 300 அளவு : 35×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆகம மண்டபத்தைத் திருமெழுகினாலே
சுத்தம் பண்ணி பட்டு மேற்கட்டி
வாழை தோரணங் கமுகு புட்ப
விதானங்களினாலே அலங்கரித்து

முடிவு :

கெருட வாகனாயை நம
செம்பரத்தைப் பூவை குண்ட
வாகின்னியை நம
செங்கழுநீர்ப்பூ ஸ்ரீ மகா லெக்ஷ்மியை நம
அற்சிக்கும்படி. அற்சனா மந்திரம்

\+ + × + +

கட்சம் சுவாவின்யை நம
பரிதை பூதடப்பரியை நம.
ஆக ஆயிதம்—38

குறிப்பு :

இது, கலைமகளைப் பூசிக்கும் முறைபற்றிக் கூறுகிறது. அத்துடன் ஆயுதபூசை அருச்சனை மந்திரமும் பேசப்படுகிறது.



வரிசை எண் : 4321 சுவடி எண் : 1923-m

# துர்கை தியானம் மகாலட்சுமி தியானம்

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை: 25 அளவு : 35×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சித்தாந்தம்

நிலைமை: பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

துற்கை தியானம்
நீலநிறம் ஒருமுகம் மூன்று நேத்திரம்
சடாமகுடத்திற் சந்திரகலை
வலது மேல்கையில் முதல் நாலிலுஞ் சூலம்
அம்பு கட்கம்

முடிவு :

சறுவலட்சண முடைய ளாயப்
பற்மாசனத்தின் மேல் எழுந்தருளி
யிருக்கிற வளாகத் தியானம்
பண்ணவும்.

குறிப்பு :

இதில், துற்கை அம்மனின் தோற்றப் பொலிவும், மகாலட்சுமியின் தோற்றப் பொலிவும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4322 சுவடி எண் : 1923-n

## வாகன பூசை

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை : 30 அளவு : 35 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

காரணங்களைப் பூசிக்கும்படி
அஞ்சுயானை அஞ்சு குதிரைகளுக்கு
ரெட்சா பெந்தனம் பண்ணி அலங்கரித்
ததினுடைய மந்திரங்களினாலே
ஆசன மூர்த்தி மூலமாக

முடிவு :

ஓம் தும் துந்து பே நம
சங்கத்துச் சங்காய நம
செங்கோலுக்குக் கனக தெண்டாய நம

முடிவு :

சிவயோகமாவது இவ்வடிவின்

அசைவின் வழியே நிற்றல்

சிவபோக மாவது இவ்வடிவே

தானாய்ப் போதல்.

தசகாரியமனுபவ முற்றியது.

நெல்வேலி மகாலிங்கம் துணை.

குறிப்பு :

இது, சைவ சித்தாந்தக் கருத்துக்களை எளிமையாக உரைநடையாகக் கூறுவது இதில் வெவ்வேறு கட்டளைகள் உள்ளன.



வரிசை எண் : 4386 சுவடி எண் : 1935-e

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 100 அளவு : 20 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்

நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மெகூரி குட்டம் இது வெல்லாம்
தீரும் நெய்

ஆவின் நெய் படி ½

பிரமிச்சாறு படி-1.

நெல்லிபருப்பு, தான்றிக்காய்

கடுக்காய், ஓமம், மஞ்சள்

முடிவு :

வெள்ளிக்கிழமை

ஞாயத்துக்கிழமை

செவ்வாய்க்கிழமை கெளி,

குறிப்பு :

இதில், உரிதி ஏடுகளாக சில மருத்துவங்கள் உள்ளன.



வரிசை எண் : 4387 சுவடி எண் : 1935-f

## நாடிப் பரீட்சை

ஏடுகள் : 53 கி. எண்ணிக்கை : 1200 அளவு : 18 × 3செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நாடிநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பெருவிர லடியில் மூணங்குல பிரமாணமதில்
சென்னலளவு மருமத்திலே நாடியிருக்கும்
அந்த நாடி காலடியிலுங் கையடியிலுங் (ம்)
யிருக்கும்–சறுவாங்கமும் பரந்திருக்கும்

முடிவு :

அறவச்ச தாம்பிரப் பலம் மூணு

தகடு தட்டி நொச்சிச் சாறு

கள்ளிப்பால் புளி யிலைச்சாத்தில்

கோமியம் எலுமிச்சம் பழச்சாற்றில்

ஊறப்போட்டு கெந்தகம்.

குறிப்பு :

இதில், நாடிப் பரீட்சை மூலம் பலநோய்கண்டறிந்து பலவகை மருந்துகள் செய்முறை சொல்லப்பட்டுள்ளன.

வரிசைஎண் : 4386

சுவடி எண் : 1936-a

# சிவஞான போதம் – உரையுடன்

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 500 அளவு : $15\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : மெய்கண்டார் பொருள் : சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்: நன்றாக குருவே நம

முதற் சூத்திரம்

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே !

மலர்தலை யுலகின் மாயிருடுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்

முடிவு :

நந்தி யுரைத்தருளு ஞான நூல் சிந்தை செய்து
தானுரைத்தான் மெய்கண்டான முரணியோர் தாமுணர
வேது திருட்டாந்தத்தா லின்று. — 9

பன்னிரண்டாஞ் சூத்திர முற்றும்.

குறிப்பு :

இது அச்சாகியுள்ளது. பிற செய்திகளை எமது சுவடி எண் 54a/D-688-ல் காண்.



வரிசை எண் : 4389 சுவடி எண் : 1936-b

# சிவஞான சித்தியார் சுரபக்கம்

ஏடுகள் : 57 கி. எண்ணிக்கை : 5000 அளவு : $15\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ மீ.
பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : அருணந்தி சிவாச்சாரியார் பொருள்: சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

காப்பு
ஒரு கோட்ட ———————— செய்யுந் தேவே
சுபபக்ஷ முதற் சூத்திரம்
அறுவகைச் சமையத்தோர்க்கு மவ்வவர் பொருளாய்
வேறாங் குரியது வுடைத்தாய் வேதாகமங்களின்
குறியிரந்தந்தங் கறிவினில் அருளாய் யம்மையோ டப்பனாகிச்
செறி வொழியாது நின்றசிவன் அடி சென்னி வைப்பாம் — 1.

முடிவு :

பரிந்திவை தாக்குமச போற் சிவமேயாக்கும் பரிசித்துஞ்
சிந்தித்தும் பார்த்துந் தானே. — 7.
பன்னிரண்டாந்சூத்திர முற்றும். ஆகத்திருவிருத்தம் — 327.
பரபக்கந் திருவிருத்தம் 627 குமரன் துணை.
தொழுது நெறிகண்டேன் தூயபரந் தானே
முழுதுமாய் வந்த முறைகண்டேன்—பழுதிலா
வெண்ணைநல்லூர் மெய்கண்ட தேவன் விரைமலர்த்தாள்
நண்ணிநான் பெற்ற நலம்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண். 1170/D-1793 போன்ற தெளிவும் வேறுபாடு காணப் படுகிறது. சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் இது ஒன்று.

வரிசை எண் : 4390 சுவடி எண் : 1936 c

# சிவஞான சித்தியார் பரபக்கம்

ஏடுகள் : 51 கி. எண்ணிக்கை : 5000 அளவு : $15\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர்: அருணந்தி சிவாச்சாரியார் பொருள் சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்:

ஒரு கோட்ட னிருசெவியன் முப்யதத்த
நால்வா யைங்கரத்த னாறு
தரு கோட்டம் பிறையிதழித் தாழ்சடை யான்றரு
மொரு வாரணத்தின் றாள்க
ளுருகோட்டன் பொடும் வணங்கி யோவதே
யிரவு புகலுணர்வோர் சிந்தைத்
திரு கோட்டு மயன்றிருமால் செல்வமு மொன்றோ
வென்னச் செய்யுந் திருவே. திருச்சிற்றம்பலம்

முடிவு :

இப்படி பிருகுசாபத் தீரைந்து பிறப்பின் மூழ்கி
மெய்படுதுயா முற்றுவருபலனல்ல
னெப்படி யானுந் சொன்னே னிறையரியல்லனென்றே
மைப்படி கண்ட னண்டன் மலரடி வணங்கிடாயே. — 31.
மறுப்பு முற்றும். ஆக பஞ்சராத்திரி மதமு
மறு தலையும் - 38 ஆகத்திருவிருத்தம் 300
சிவஞான சித்தியார் பரபக்க முற்றும்
பஞ்சாட்ஷர நாதன் திருவடித் தாமரையே துணை.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 1170-a D-1792 போன்றது. இந்நூல் சைவசமய சித்தாந்த சத்திரங்களுள் ஒன்று.

வரிசை எண் : 4391 சுவடி எண் : 1936-d

# சிவப்பிரகாசம்

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 1000 அளவு : $15\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்

பொருள் : சித்தாந்த நூல் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு
களியார வருமானை கழல் நாளு மறவாம
லறியாளு மலர்தூவு மடியார்க ளுளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே

முடிவு :

திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காசநன் னூல்
விரிவது தெளியுமாற்றால் விளம்பிய வேது நோக்கிப்
பெருகிய வுவமை நான்கின் பெற்றியி னிறுவிப் பின்முன்
றருமலை வொழியக் கொள்வோன் றன்வயிற் சாற்ற லாமே !

சிவமயம் உண்மை முற்றும் — 50

ஆகச் சிவப்பிரகாசம் விருத்தம் 100 முடிந்தது

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, எமது, சுவடி எண்54-e/D-692 போன்றது சைவசித்தாந்த சாத்திர நூல்கள் பதினான்களுள் இது ஒன்று, அச்சாகியுளது,



வரிசை எண்: 4392 சுவடி எண் : 1936-e

# பிரசாதம் (சிவாகமக் கலை - 16)

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை: 100 அளவு : $15\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அருள்வளர் தில்லை மூதூர்
　அழகிய மன்று ளாடல்
மருவிய பெருமா னீன்ற
　மழவிளங் களிறு காப்ப
விரவிய சிவாக மத்தின்
　விதிவதி கலையீ ரெட்டும்
திருமலி தமிழி னாலே
　தெரிந்துரை செப்ப லுற்றாம் — 1

முடிவு :

உன்மனைக்குச் சொலவாங் களங்க
　சமனாந்த மலந் துவாதசாந்தத்
தளவும் கருது நிராதாரமா
　முன்மனையுங் கடந்தே. — 12

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

சோடச கலை எனப்படும் சிவாகமக்கலை 16-க்கும் விளக்கும் கூறுகிறது. ஆனால் தலைப்பு 'ப்ரசாதம்' என வடமொழி எழுதப்பட்டுளது.

முகப்பு ஏட்டில் முன்பக்கம்

சிவமயம் நீயே துணையென்று நானிருந்தே னென்னை நீ
　மறந்தாற் றாயே யெனக்கொரு தஞ்சமுண்டோ.

என்னும், பின்பக்கம், ''அஞ்செழுத்து மெட்டெழுத்து'' மெனத் தொடங்கும் கொடிக்கவிப் பாடல் ஒன்றுளது.



வரிசை எண் : 4393 சுவடி எண் : 193 ;-F

# சைவசித்தாந்த நூல்

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 15½ × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

ஏக னனேக னிருள்கரும மாயை
யிரண்டாக விவையாறா தியல்.

ஏக னென்பது கற்தா. அனேக னென்பது ஆற்மா.
இருளென்பது ஆணவமலம். கரும மென்பது
புண்ணிய பாவங்களாகிய கரும மலம்.

முடிவு :

ஆசாரியார் திருமேனி கொண்டெழுந்தருளி வருதல்
அங்குத்தி. அனுக்கிரகம் பண்ணப் படாநின்ற
ஞான சாத்திரமிது மோட்ச மடையும் முறைமை
யென வறிக — 68

குறிப்பு :

இது, சித்தாந்த முறைப்படி மோட்சமடையும் வழியைக் கூறுகிறது.

இதன் பின்னர் சிவஞான சித்தியார் சுபக்க, பரபக்க அட்டவணைகள் ஏழு ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4394 சுவடி எண் : 1937-a

# சிவஞான போதச் சிந்தனை

ஏடுகள் : 44 கி. எண்ணிக்கை : 1800 அளவு : 13½×4 செ.மீ.

பக்கத்திற்கு : 17 வரிகள் ஆசிரியர் : மெய்கண்டார் பொருள் : சைவசித்தாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கல்லா னிழன்—கல்லாலின் கீழே
எழுந்தருளியிருந்து அகத்தியர் புலத்தியர்
சனகர் சனற்குமாரரிவர்கள் நால்வர்க்குந்
தன்மார்த்த காம மோட்சத்தை யருளிச்செய்த

முடிவு :

பூதலத்திலே யுள்ள வாற்மாக்களறிய எ.து
திருட்டாந்தத்தா லின்று ஏதுக்களாலுந்
திருட்டாந்தத்தாலு மிப்பொழு தென்றவாறு. — 9

முற்றும்

சிவஞான போத முற்றும்

குறிப்பு :

சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் முதலாவதாக உள்ளது. சிந்தனை என்ற பெயரால் உரைவிளக்கம் காணப்பட்டுளது. அச்சாகியுள்ளது. இந்நூற்குப் பல உரைகண்டுள்ளனர். சுவடி எண் 1936–a போன்றது. பிற செய்திகள் சுவடி எண் 54-a/D–688 இல் காண்க.



வரிசை எண் : 4395 சுவடி எண் : 1937-b

# சிவாப்பிரகாசச் சிந்தனை

ஏடுகள் : 52(45-96) கி. எண்ணிக்கை : 2000 அளவு: $13\frac{1}{2} \times 4$ செ.மீ.

பக்கத்திற்கு : 17 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஒளியான திருமேனி—ஞானப்பிரகாசமான
திருமேனியிலே நின்றும், உ ' ழ்தான மிக மேவு
சொரியா நின்ற மூன்று மதங்களு மிருதியும்
பொருந்துகை யினாலே

முடிவு :

முன்னோடே பின் மயக்க விகற்பந்தீரக்
கொள்ளுகிற முறைமையுடைய வர்களுக்கே
சாற்றலாமே இந்தநூலை யனுக்கிரகம்
பண்ணலா மென்றவாறு — 100

சிவப்பிரகாசச் சிந்தனை முற்றும்

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. சிந்தனை என்ற பெயரால் உரை தரப்பட்டுள்ளது.

எமது சுவடி எண் 54-e/D-692-ல் பிற செய்திகள் உள்ளன.



வரிசை எண் : 4396 சுவடி எண் : 1937-c

# திருவருட்பயன் சிந்தனை

ஏடுகள் : 19 கி எண்ணிக்கை : 800 அளவு : 13½ × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 19 வரிகள் ஆசிரியர் : கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்

பொருள் : சைவசித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நற்குஞ்சரக்கன்று நண்ணில் --
நல்ல ஞானமே சொருப மாகிய வானை முகத்தினை
யுடைய விக்கின சுரன் பொருந்தில் அஞ்ஞான
நீங்கி ஞானம் பிரகாசியா நிற்கும்.

முடிவு :

தங்கருணை வெள்ளத் தலைவர் மிக
தம்முடைய கிருபா சமுத்திரத்திலே மிகவு
மிரங்குவார்களென்றவாறு — 10
திருவருட்பயன் சிந்தனை வுரை முற்றும்
திருச்சிற்றம்பலம்
செப்பரை மடத்துக்கு

குறிப்பு :

இதுவும் சைவசிந்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. சிந்தனை என்ற பெயரால் உரைவகுக்கப்பட்டுள்ளது. முதலிரண்டும் சேர்ந்து மூன்று உரைகளுள் ஒருவருடையதே. ஆசிரியர் அறியக்கூடவில்லை. பிற செய்திகள் சுவடி எண் 54-f/D—693 தரும்.

வரிசை எண் : 4397 சுவடி எண் : 1938

# காசி காண்டம்

ஏடுகள் : 75 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 35×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அதிவீரராம பாண்டியர் பொருள் : தலபுராணம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி: ஓம் நன்றாகக் குருவே துணை.
மாத்தரிய தொல் பிறவி மறிகடலி லிடைப்பட்டு
போத்துருதன் குரைகழற்றாட் புணைபற்றிக் ———
——— முத்தித் தடங்கரையின் மிசையுய்ப்பக்
காத்தெரியுந் தனை செவிய கடாக்களிற்றை வணங்குவாம்

முடிவு :

——— குநீ வேண்டில் நிலவு கதிர்கால் முத்த நகைப் பொன்னே
யழியாப் பொருளுளதோ புகல்தி யென்லும் புகலுவாழ்.——

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 26 /D-470 போன்றது. ஏடுகள் ஒடிந்தும், கனாயான் அரித்தும், தலைதடுமாறியும் உள்ளன. இடையிடையே ஏடுகள் இல்லை. உதிரி ஏடுகளாக உள்ளன.



வரிசை எண் : 4398 சுவடி எண் : 19.9-a

# சிதம்பர புராணம்

ஏடுகள் : 99 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 32×2½ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : பரஞ்சோதி முனிவர் பொருள் : தலபுராணம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி: ஓம் நன்றாக சரசோதியே துணை

வான நாடரு மாதவ நாடரு
மோன ந(ஞ)ான முழுதுணர்ந்திடத்
தான மேவுந் தடவிகடாசல
வானை மாமுகத் தண்ணலை யேத்துவாம்.

முடிவு :

தாவிலா மறைச் ——— மூவுல கோங்கவே. — 97.

இந்த வெல்லை மலைநாட் டிடத்தினும்
வந்த தேயவ் வடமொழி யப்படி
செந்தமி ழைத் தொடை யாய்ப்பாற் தெரித்தன்
முந்து மற்றதும் வந்தான் மொழிதுமால் — 98

9-வது துற்றெரிசனச்சருக்க முற்றும்
ஆகத் திருவிருத்தம். 813.

காலம் :

846 ம் வருஷம் சாதாரண வருஷம் ஆவணி மாதம் 23-ந் தேதி சுவாமிநாத பண்டாரத் திருவருளினாலே எழுதிமுடிந்தது முற்றும். ஓம் சுவாமிநாத குருவே நம: ஓம் கணபதியே நம. சொக்கர் துணை. அங்கயற்கண்ணம்மை துணை. ஆறுமுகம் துணை.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 287-a/D-491 போன்றது.



வரிசை எண் : 4399 சுவடி எண் : 1939-b

# வேதாளக்கதை-செய்யுள்

ஏடுகள் : 44 கி. எண்ணிக்கை : 2500 அளவு ; 32×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : கவிக்களஞ்சியப் புலவர் பொருள் : கதை

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து தமிழ்.

தொடக்கம் :

கணபதயே நம.

மகாதேவன் உமைக் கருளிச் செய்த வேதாளக் கதை
பெரும்புகழ் பெறும்படி யருந்துயர் கெடும்படி
× × × × ×
கிண்கிணி யிலங்கிய பதம் பணிவாம் — 1.
பாரோரு மியலரிக்கை ——— துதிப்பேனே — 2.
சீரிதாகவித் தேசத்தி ——— பாடலுற்றாமரோ — 3.

முடிவு :

இன்ன தெண்ணாமல் சிவனளிக்கையால்
பின்னு மண்னாவலர் கூடிப் பேசியே
மன்னனை மனது சோதிக்க வானதருத்
தன்னையு மெமக் கினித் தருக வென்றனர் — 9.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 114 a/D-580 போன்றது. 16-வது சீமூத வாகனன் கதையில் 9 செய்யுட்கள் வரையே உள்ளன. இதில் 25 சருக்கங்கள் உண்டு.



வரிசை எண் : 4400 சுவடி எண் : 1939-c

## சிவதரு மோத்திரம்

ஏடுகள் : 105 கி. எண்ணிக்கை : 10000 அளவு : 32×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர்: மறைஞானசம்பந்தர் பொருள் : சைவசமய நூல்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்: முதலாவது பரமாதி யியல்
மலைக்குமகள் பெற்ற மகனைக் கயமுகத்தனை மனத்தெழுதியா
லைற்பிணி பிறப்பிற வனுக்களை யகத்திய முனிக்கருளினா

லுலப்பில் கருணைக்கட லுருத்திர னுருத்தனி லுதித்தகுமா
னிலக்குமிய லைக்கலியினைக் கவுமுரைப்பனுல கிட்டமுறவே! — 1

முடிவு :

மதகரி பேழ்வாய் வலிமுகமா மாமறை வாழும்
பொதிமலை மீதேபுரி முனிதானென புகழ்வாமே ! — 228

12-வது கோபுரவியன் முற்றும். குருவே துணை.
ஆகவியல் பன்னிரண்டினுக்கும் விருத்தம் — 1208

சந்திரசேகரர் ஸ்ரீ பாதமே துணை. கனகசபை நாதன்
திருவடிகளே சரணம்.

காலம் :

868-ஆம் வருஷம், சுக்கில வருஷம், பங்குனி மாதம் 3-ஆம் தேதி சிவதரு மோத்தரம் முகிந்தது. முற்றும் குருபாதமே துணை.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 363/D-745, பேன்றது.
பிற செய்திகளை இதில் காண்க.



வரிசை எண் : 4401 சுவடி எண் : 1940-a

# திரு இரட்டைமணி மாலை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 100 அளவு : 33½ × 4½ செ.மீ.

பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : காரைக்காலம்மையார் பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கிளந்துந்து வெந்துயர் வந்தடும்போ
தஞ்சி நெஞ்ச மென்பாய்

தளர்ந்திங்கி ருத்தற விர்திகண்டாய்
தவிராது வந்தி
வளர்ந்துந்து கங்கையும் வானத்திடை
வளர்கோட்டு வெள்ளை
யிளந்திங்களு மெருக்கு மிருக்குஞ்
சென்னி யீசனுக்கே. — 1

முடிவு :

னுத்தமாய், நீளாழி நஞ்சுண்ட நெய்யாடி தன்றிறமே
கேளாழி நெஞ்சே கிளர்ந்து — 20
திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள் பதினோராந் திருமுறையில் உள்ளது. விருத்தமும் வெண்பாவு மாகப்பாடப்படுவது இரட்டைமணிமாலை. பாட வேறுபாடுகள் உள்ளன. அடுத்த ஏட்டில் முடிகிறது.

சுவடி எண் 381-e/D-848 போன்றது.



வரிசை எண் : 4402 சுவடி எண் : 1940-b

## அற்புதத் திருவந்தாதி

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 800 அளவு : $33\frac{1}{2} \times 4\frac{1}{2}$ செ.மீ
பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : காரைக்காலம்மையார் பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தே—னிறந்திகழு
மைஞ்ஞான கண்டத்து வானோர் பெருமானே
யெஞ்ஞான்று தீர்ப்ப திடர் ! ... 1

முடிவு :

உரையினா லிம்மாலை யந்தாதி வெண்பாக்
கரையினாற் காரைக்காற் பேய்சொற்—பரவுவா
ராராத வன்பினோ டண்ணலைத் தாமேத்துவார்
பேராத காதல் பிறந்து. — 101

காரைக்காலம்மை யந்தாதி முற்றும்
திருச்சிற்றம்பலம்

இது, சைவத் திருமுறைகள் பனிரண்டனுள் 11-ஆந் திருமுறையைச் சாரும். அச்சாகியுள்ளது.



வரிசை எண் : 4403 சுவடி எண் : 1940-c

## பொன்வண்ணத் தந்தாதி

ஏடுகள் : 6½ கி. எண்ணிக்கை : 800 அளவு : 33½ × 4½ செ.மீ
பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : சேரமான் பெருமாள் நாயனார் பொருள் சைவத்திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து தமிழ்.

தொடக்கம் :

பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண
மேனிபோ லிருதிலங்கு
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம்
வீழ்சடை வெள்ளிக் குன்றந்
தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண
மால் விடைதன்னைக் கண்டாற்
நன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண
மாக்கிய வீசனுக்கே.

முடிவு :

காயின வானை வளருங்கனக் மல்யருகே
போயின காக்கையும் அன்றே படைத்தது பொன்வண்ணமே ! —100.

அந்தாதி முற்றும்

திருச்சிற்றம்பலம்

சற்குருநாத சுவாமி பாதாரவிந்தமே கெதி

வேலப்ப சுவாமி பாதாரவிந்தமே கெதியாகவும்

குறிப்பு :

முன் ஏட்டில் தொடங்குகிறது. இதுவும் 11-ஆம் திருமுறையைச் சாரும். அச்சானது.



வரிசை எண் 4404 சுவடி எண் : 1940-ச

## (திருக்கயிலாய) ஞான உலா

ஏடுகள் : 5½ கி. எண்ணிக்கை: 800 அளவு : 33½ × 4½ செ.மீ

பக்கத்திற்கு: 13 வரிகள் ஆசிரியர் : சேரமான் பெருமாள் நாயனர் பொருள் : சைவத்திருமுறை நிலைமை : சிறிது பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருமாலு நான்முகனுந் தேர்ந்துணரா தன்றங்
கருமாலுற வழலாய் நின்றபெருமான்
பிறவாதே தோன்றினான் காணாதே காண்பான்
றுறவாதே யாக்கை துறந்தான் — முறைமை

முடிவு :

பெண்ணீர்மை காமின் பெருந்தோ ளிணைகாமி
னுண்ணீர் மேகலையு முள்படுமின் — தெண்ணீர்
காரேறு கொன்றையந்தார்க் காவாலி கட்டங்க
ஞரேறு போந்த துலா !.

திருச்சிற்றம்பலம்.

ஞானவுலா முற்றும்
பரமகுரு தேசிகள் பாதாரவிந்தமே கெதி
சிவகாமி வயித்தீசுரர் பாதார விந்தமே கெதி.

குறிப்பு :

இதுவும், 11-ஆம் திருமுறையில் உள்ளது.

வரிசை எண் : 4405 சுவடி எண் : 1940–e

# க்ஷேத்திரத் திருவெண்பா

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 200 அளவு : $33\frac{1}{2} \times 4\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : காடவர்கோன் பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஓடுகின்ற நீர்மை யொழிதலுமே யுற்றாருங்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று — நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணா முன்னனெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர். — 1

முடிவு :

உய்யு மருந்திதனை யுண்மி னெனவுற்றார்
கையைப் பிடித்தெதிரே காட்டியக்கால் — பைய
வெழுந்திரும் யான்வேண்டே னென்னாமு னன்னெஞ்சே
செழுந்திரு மயானமே சேர் — 24.

திருச்சிற்றம்பலம்

சிவகாமி வயித்திய லிங்கம் பாதார விந்தமே கெதி
குருபாதமே கெதி

குறிப்பு :

சைவத் திருமுறைகள் பனிரண்டனுள் இது பதினோராம் திருமுறையைச் சார்ந்தது. அச்சானது.



வரிசை எண் : 4406 சுவடு எண் : 1940-f

# (கைலைபாதி) காளத்திபாதி அந்தாதி

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 700 அளவு : $33\frac{1}{2} \times 4\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : நக்கீரதேவர் பொருள் : சைவத் திருமுறை

நிலைமை ; நல்ல நிலை முழுமை : முற்றுமுள்ளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சொல்லலும் பொருளுமே தூத்திரியு நெய்யுமாய்
நல்லிடிஞ்சி லென்னுடைய நாவாகச்—சொல்லரிய
வெண்பா விளக்கா வியன்கயிலை மேலிருந்த
பெண்பாகர்க் கேற்றினேன பெற்று.

முடிவு :

மற்றும் பலிபிதற்ற வேண்டா மடநெஞ்சே
கற்றைச் சடையண்ணல் காளத்தி — நெற்றிக்க
ணாரா வமுதின் றிருநாம மைஞ்செழுத்துஞ்
சோராம லெப்பொழுதுஞ் சொல்லு. — 100

காளத்தி யந்தாதி முற்றும்
திருச்சிற்றம்பலம்
சிவமயம்.

குறிப்பு :

அடுத்த ஏட்டில் முடிகிறது. இதுவும் பதினோராம் திருமுறையைச் சார்ந்தது



வரிசை எண் : 4407 சுவடி எண் : 1940-g

## (திரு) ஈங்கோய் (மலை) எழுபது

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 700 அளவு : $35\frac{1}{2} \times 4\frac{1}{2}$ செ.மீ பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : நக்கீர தேவநாயனார் பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அடியு முடியு மரியு மயனும்
படியும் விசும்பும் பரந்தேறி—நொடியுங்கா
லின்ன தெனவறியா வீங்கோயே யோங்கார
மன்னதென நின்றான் மலை.

முடிவு :

வழுகிதழ்க் காந்தள்மேல் வண்டிருப்பொண் டீயின்
முழுகிடுதன் றஞ்சி முதுமந்தி — பழகி

யெழுந்தெழுந்து கைநெரிக்கு மீங்கோயே திங்கட்
கொழுந்தெழுந்த செஞ்சடையான் குன்று. — 70

ஈங்கோ யெழுவது முற்றும்

குறிப்பு :

இதுவும் 11-ஆம் திருமுறையிலுள்ளது. அச்சாகியுள்ளது.



வரிசை எண் : 4408 சுவடி எண் : 1940-h

# திருவலஞ்சுழி மும்மணிக்கோவை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 200 அளவு : 33½ × 4½ செ.மீ.

பக்கத்திற்கு: 14 வரிகள் ஆசிரியர் : நக்கீரதேவர் பொருள் : சைவத்திருமுறை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

வணங்குதும் வாழி நெஞ்சே
புணர்ந்துடன் பொருகடல் முகந்து கருமுகிற்
கணற்பட வரவொடு மின்னிக் குடவரைப்
பொழிந்து கொழித்திழி யருவி

முடிவு :

கொம்பார் குளிர்மறைக் காடனை
வானவர் கூடி
நம்பாவென வணங்கப் படுவானை
நகரிரிய
வம்பாய்ந்தவனை வலஞ்சுழியானை
அண்ணாமலைமேல்
வம்பார் நறுங்கொன்றைத் தாருடையானை
வணங்குது மே. ... 15

திருச்சிற்றம்பலம்

சற்குரு பாதாரவிந்தமே கெதி

குறிப்பு:

இது, சைவத்திருமுறைகளில் பதினோராந் திருமுறை, அச்சாகியுள்ளது.

வரிசை எண் : 4409 சுவடி எண் : 1940-i

# திருக்கழுமல மும்மணிக்கோவை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 200 அளவு : 33½×4½ செ.மீ. பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : பட்டினத்துப் பிள்ளையார் பொருள் : சைவத்திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருவளர் பவளப் பெருவரை மணந்த
மரகதவல்லிபோல
வொரு கூறிமையச் செல்வி பிரியாது
விளங்கப் பாய

முடிவு :

சூதும் பெருமலை பங்கர் தென்
றோணிபுரேசர் வண்டின்
றாதும் பெறாத வடித்தாமரை
சென்று சார்வதற்கே ! — 12
திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, சைவத் திருமுறைகள் பனிரண்டனுள் பதினோராந் திருமுறையில் உள்ளது அச்சாகியுள்ளது.



வரிசை எண் : 4410 சுவடி எண் : 1940-j

# கோயிற்றிரு நான் மணிமாலை

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 600 அளவு : 33½×4 செ.மீ பக்கத்திற்கு: 15 வரிகள் ஆசிரியர் : பட்டினத்துப் பிள்ளையார் பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பூமே லயனறியா மவுலிப் புறத்ததே
நாமே புகழ்ந்தளவு நாட்டுவாம்—பாமேவு
மேத்துவந் தான்றில்லை யிடத்துவந்தா னம்பலத்தே
கூற்றுவந்தான் கொற்றக் குடை — 1

முடிவு :

பொன்னம்பலம் போற்றி யப்பலத்தாடு நாடகம்
போற்றி யென்றாங் கென்றும் போற்றினு
மென்றனக் கிறைவ போற்றி கில்லென
போற்றி யாயினும் போற்றி போற்றி
தினவு பொலம் பூவடிக்கே. — 40

திருச்சிற்றம்பலம்
குருவே துணை

குறிப்பு :

இது சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள் பதினோராம் திருமுறையில் உள்ளது. அச்சாகியுள்ளது. கோயில் என்பது சைவர்கட்குச் சிதம்பரம் எனப்படும்.



வரிசை எண் : 4411 சுவடி எண் : 1940-k

# திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 700 அளவு : $33\frac{1}{2} \times 4$ செ.மீ. பக்கத்திற்கு: 15 வரிகள் ஆசிரியர் : பட்டினத்துப் பிள்ளையார் பொருள் : சைவத்திருமுறை நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தெய்வத் தாமரைச் செல்வியின் மலர்ந்து
வாடாப் புதுமலர் தோடெனச் சிவந்த

சிலம்புங் கழலு மலம்பப் புனைந்து
கூற்றி னாற்றல் மாற்றிப் பொற்றாது

முடிவு :

சிரந்தினுமா யென்றன் சிந்தைய தாகித்த
வெண்காட னெனுந்
தரத்தினுமாயது நின்னடியாந்
தெய்வத் தாமரையே ! ... 30
திருச்சிற்றம்பலம்
சிவமயம்

குறிப்பு :

இது, சைவத்திருமுறைகளில் பதினோராந் திருமுறையில் உள்ளது. அச்சாகி உள்ளது.



வரிசை எண் : 4412 சுவடி எண் : 1940-I

# தியாகராச ருலா

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 1:00 அளவு : $33\frac{1}{2} \times 4$ செ.மீ
பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : அந்தகக்கவி வீரராகவ முதலிய ஈர்
பொருள் : உலா நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

திருச்சிற்றம்பலம்
அமலைக் கொருபாகர் ஆரூர்த் தியாகர்
சுமலைத் திருவுலாக் காப்பாந்—திமிலவயல்
மீதாவி வேழமுக மீன்குதிக்கு மப்பதியில்
வாதாவி வேழமுக வன்.

முடிவு :

வழிபோந்தான் சந்தாய்ப் பாவை மாடத்
துழிபோந்தான் போந்தா னுலா.

திருசிற்றம்பலம்

தியாகராசன் துணை.

குறிப்பு :

இது, திருவாரூரில் கோயில் கொண்டுள்ள சிவ பெருமான் உலாப் போந்த தாகப் பாடப்பட்டது. இதில், பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் ஆகிய எழுவகைப் பருவமகளிரும் இடம் பெறுவது. நடை சிறந்து காணப்படுகிறது.



வரிசை எண் : 4413 சுவடி எண் : 1940-m

# திருக்காளத்தியாள்வார் உலா

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 3 ½ × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 1 வரிகள் ஆசிரியர் : சேறைக்கவிராச பிள்ளை பொருள் : உலா

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

காருலாவுஞ் சோலைக் காளத்தி யாள்வார்க்குச்
சீருலா விண்ணப்பஞ் செய்யவே – பாரில்
விளங்கரு ளஞ்சி நதியார் வேழமுகனானார்
களங்கருள் சோதியார் காப்பு.

முடிவு :

குயிலாய மென்மொழியாள் கூறாய வாறுங்
கயிலாயா யான்காணக் காட்டு
திருக்காளத்தி யாள்வா ருலா
எழுதி முற்றியது.
ஞானப் பூங்கோதை பாதாம்புயமே கெதி.

குறிப்பு:

திருக்கண்ணப்ப நாயனார் கண்ணிடந்து அப்பிய தலம் திருக்களாத்தி ஞானப் பூங்கோதை உடனாய திருக்காளத்தி நாதர் கோயில் கொண்டுள்ளார். இந்த உலாவிலும் எழுவகை பருவ மடந்தையர் இடம் பெறுகின்றனர்.



வரிசைஎண் : 4414 சுவடி எண் : 1940-n

# திருக்கழுக்குன்றத்து உலா

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 1700 அளவு : 33½ × 4செ.மீ

பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : அந்தகக்கவி வீரராகவ முதலியார்

பொருள் : உலா நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

புவனிக் கொருமுதலாம் பொற்கழுக் குன்றீசர்
பவனித் திருவுலாப் பாடக்-கவி நடத்தும்
பண்டுவனத் தந்தாமப் பாம்பமளிப் பாம்பு தொழும்
வண்டுவனத் தந்தா வளம்:
— காப்பு .

முடிவு :

கச்சியான் காசியான் காளத்தி யான்கழுக்குன்
றுச்சியான் போந்தா னுலா.
திருக்கழுக் குன்றத்துலா முகிந்தது
வேலப்ப சுவாமி திருவடி வாழ்க.

குறிப்பு :

''கட்டனேனையும் ஆட்கொள்வான் வந்து காட்டினாய் கழுக்குன்றிலே'' என்று மாணிக்கவாசகரால் புகழ்ப்பட்ட திருத்தலம் திருக்கழுக்குன்றம். இந்தலத்து இறைவன்

உலாப்போந்த நிலை கண்டு எழுவகைப் பருவ மங்கையர் காமுற்ற செய்தி பாடப் பட்டுள்ளது பிழைகள் மலிவு.

இதன் பின்னர், ''செப்பறை உலா'' என்று தொடங்கிய ஒரு செய்யுள் மட்டுமே உளது.



வரிசை எண் : 44 5 சுவடி எண் : 1940.௦

# அருணாச்சல புராணம்

ஏடுகள் : 35 கி. எண்ணிக்கை : 4000 அளவு : 33½ × 4 செ.மீ

பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : சைவ எல்லப்ப நாவலர் பொருள் : தல புராணம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம நன்றாக
அருண மாநகர்ச் சருக்கம்

மிக்க வேத வியாதன் விளம்பிய
இக்கதைக் கியலின் றருள் செய்திட
முக்கண் வெற்பினை மும்மத வாரியை
வைக்க ளிற்றினைக் கைதொழு தேத்துவாம். நன்றாக.

முடிவு :

இக்கதை படித்தோர் கேட்டோர் எழுதினோர்
எழுதிவைத்தோர்
மைக்கடல் சூழ்ந்த விந்த வையகம் முழுதும் யாண்டுத்
தக்க சந்தான போகஞ்சவுபாக்கியந் தன்னில் வாழ்ந்து
திக்கரு ணேசல் பாலச் சிவபதம் பெறுவரென்றும் — 8

புளகாதிச் சருக்கம் முற்றும் ஆகச் சருக்கம் 13-க்கு
திருவிருத்தம் 589. அருணசல புராணம் முற்றும்
திருச்சிற்றம் பலம். அருணாசலீசுபரன் துணை.

காலம :

1021-ஆம் வருஷம் கார்த்திகை மாதம் 7-ந் தேதி

மாரியாடிய பெருமாள் கையெழுத்து.
செப்மறை மடத்துக்கு

குறிப்பு :

இது, திருவண்ணாமலையின் சிறப்புரைப்பது. எமது சுவடி எண் 981/D-1190 போன்றது. அச்சாகியுளது.

இது, கூந்தற்பனைச் சுவடி.



வரிசை எண் : 4416 சுவடி எண் : 1940-p

# விருத்தகிரிப் புராணம்

ஏடுகள் : 23 கி. எண்ணிக்கை : 6000 அளவு : $33\frac{1}{2} \times 4$ செ மீ.

பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : ஞானக்கூத்த சிவப்பிரகாச தேசிகர்

பொருள்: தல புராணம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஹரி : ஓம் நன்றாக
பாயிரம்

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவுங்
கருணை பூக்கவும் தீய்மையைக் காய்க்கவும்
பருவ மாய்நம துள்ளம் பழுக்கவும்
பெருகுமா முத்துப் பிள்ளையைப் பேணுவாம். —1

முடிவு :

திங்கள் மும்மழை பெய்யச் செழும்புவி
பொங்கி வாள்கப் புரவல னோங்குக
நங்கள் சங்கரன் பூசை நலம்பெறச்
சங்க ரனடி யார்கள் தழைக்கவே. —30

சசிவன்னச் சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 18-க்குத்
திருவிருத்தம் 134. திருச்சிற்றம்பலம்
பழமலைநாத சுவாமி துணை. குலசேகரம் பட்டணம்
ராமநாதபிள்ள்ள் மகன் மாறியாடும் பெருாள் கைஎழுத்து
சிவசகாயம்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 979/D-1192 போன்றது. அச்சாகியுளது.

இது, கூந்தற்பனைச் சுவடி.



வரிசை எண் : 4417 சுவடி எண் : 1940-q

# வாதவூரர் புராணம்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 8000 அளவு : $33\frac{1}{2} \times 4$ செ.மீ.

பக்கத்திற்கு: 15 வரிகள் ஆசிரியர் : கடவுண்மாமுனிவர் பொருள் : புராணம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடககம் :

ஹரி : ஓம் நன்றாக
மந்திரிச் சருக்கம்

பவளமால் வரையி னிலவெறிப் பதுபோல்
பரந்த நீற்றழகு பச்சுடம்பில்த்
திவளமா துடனின் றாடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும் போர்

முடிவு :

ஞால மோங்குக நான்மறை நீடுக
சீல மன்னவன் செங்கேல் விளங்குக
கால மாமழை மன்னுநற் காதலால்ச்
சாலு மீசன் அடியார்கள் தழைக்கவே. —33

திருவடி பெற்ற சருக்கம் முற்றும்

ஆகச் சருக்கம் 8-க்குத் திருவிருத்தம் 542
திருச்சிற்றம்பலம், குலசேகாம் பட்டணம் ராமநாதபிள்ளை குமாரன்
மாறியாடும் பெருமாள் கையெழுத்து. நன்றாக.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 978/D-1188 போன்றது.

கூந்தற்பனைச் சுவடி. அச்சாகியுளது.

இதன் பின்னர் மூன்று உதிரி ஏடுகள், குமர புரிப்படலம், புத்தக அட்டவணை, குற்றாலப் புராணம் ஆகியவை உள்ளன.



வரிசை எண் : 4418 சுவடி எண் : 1940-r

# திருவிசைப்பா — கோயில்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 600 அளவு : 33½×4 செ.மீ.

பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : திருமாளிகைத் தேவர் பொருள் : சைவத் திருமுறை நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
யுணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் றிரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்கும் தேனே
யளிவள ருள்ளத்து ஆனந்தக் கனியே
யம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே ! —1

முடிவு :

சிறப்புடை யடியார் தில்லைச்
செம்பொ னம்பலவர்க் காளா
முறைப்புடை யடியர் கீழ்க்கீ
ழுறைப்பர் சேவடி நீக்கிடு
மிறப்புடை பெயனக்கு மிக்கவ
மாக்கு மீண்டு மீண்டும்
பிறப்பரைக் காணா கண்வாய்
பேசாதப் பேய்க ளோடே ! —11

திருச்சிற்றம்பலம்

திருமாளிகைத் தேவ ரருளிச் செய்த திருப்பதிகம் நாலுக்குச் செய்யுள் 45

குருவே நம

குறிப்பு :

இது, சைவத் திருமுறைகள் 12-னுள் 9-ந் திருமுறையாகும் இதில், கோயில் எனப்படும் சிதம்பரத்தில் பாடியருளிய 1. ஒளிவளர் விளக்கே, 2. உயர் கொடியாடை, 3. உறவாகி, 4. இணங்கிலயீசன் எனத் தொடங்கும் 4 திருவிசைப்பாக்கள் பண்ணுடன் உள்ளன. அச்சாகியுள்ளன.



வரிசை எண் : 4419 சுவடி எண் : 1940-s

# திருப்பால்லாண்டு

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 100 அளவு : 33 × 4 செ.மீ

பக்கத்திற்கு: 12 வரிகள் ஆசிரியர் : சேந்தனார் பொருள் : சைவத் திருமுறை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பண் பஞ்சமம்

மன்னுக தில்லை வளர்கநம் பத்தர்கள்
வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து
புவனியெல்லாம் விளங்க
வன்னநடை மடவாள் உமைகோ னடியோமுக்
கருள் புரிந்து
பின்னைப் பிறவி யறுக்க நெறிதந்த
பிச்சர்க்குப் பல்லாண்டு கூறுதுமே ! — 1

முடிவு :

எந்தை எந்தாய் சுற்ற முற்று மெனக்
கமிர்தா மெம்பிரா னென் றென்று
சிந்தை செயுஞ்சிவன் சீரடி யாரடிநாய்
செப்புறை யந்த மிலா னந்தச்
செந்தே னெனைப் புகுந்தாண்டு கொண்டா
ருயிர்மேற்
பந்தம் பிரியப் பரிந்தவ னேயென்று
பல்லாண்டு கூறுதுமே ! — 13

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

தில்லைச் சிதம்பரத்துள் அருளியது. சைவ வரலாற்றுச் செய்திகளை உள்ளடக்கியது. சைவ இறைவனுக்குப் பல்லாண்டு பாடியவர் இவர் ஒருவரே. அச்சானது. பஞ்ச புராணத்துள் இடம் பெறுவது. 9-ஆம் திருமுறையில் உள்ளது. அச்சானது

வரிசை எண் : 4420 சுவடி எண்: 1940-t

# திருவிசைப்பா

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 800 அளவு : 33½ × 4 செ.மீ

பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : சேந்தனார் பொருள் : சைவந் திருமுறை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருவீழி மிழலை பண் - பஞ்சமம்

ஏக நாயகனை இமையவர்க் கரைசை
யென்னுயிர்க் கமிர்தினை யெதிரில்
போக நாயகனைப் புயல்வணர்க் கருளிப்
பொன்னெடுஞ் சிவிகை யாவூர்ந்த

முடிவு :

செழுந்தடம் பொழில்சூழ் திருவிடைக் கழியிற்
றிருச்குரா நீழற் கீழ்நின்ற
வெழுங்கதி ரொளியை யேத்துவார் கேட்பா
ரிடர்கெடுமாலுலா மனமே — 11

திருச்சிற்றம்பலம்

சேந்தனா ரருளிச் செய்த திருப்பதிக (திருப்பல்லாண்டு உட்பட) நாலுக்கு செய்யுள் — 47

குறிப்பு :

இதில், 'ஏகநாயகனை' எனத் தொடங்கும் திருவீழிமிழலைத் திருவிசைப்பா, 'பொய்யாத வேதியர்' எனத் தொடங்கும் திருவாவடுதுறைத் திருவிசைப்பா, 'மாலுலா மனந்தந்த' எனத் தொடங்கும் திருவிடைக்கழி திருவிசைப்பா ஆகிய மூன்று திரு விசைப்பாக்கள் (பதிகம்) உள்ளன.



வரிசை எண் : 4421 சுவடி எண் : 1940-u

# திருவிசைப்பா

ஏடுகள் : 8½ கி. எண்ணிக்கை : 1000 அளவு : 33½ × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : கருவூர்த்தேவர் பொருள் : சைவத் திருமுறை நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

கோயில் - பண் - புறநீர்மை

கணமிரி குடுமிச் செம்மணிக் கவைநாக்
 கறையணற் கட்செவிப் பகுவாய்ப்
பணம்விரி துத்திப் பொறிகொள் வெள்ளெயிற்றுப்
 பாம்பணி பரமர்தங் கோயின்

முடிவு :

தருங்கரும் பனைய தீந்தமிழ் மாலை
 தடம்பொழில் மருதயா முதிப்ப
வருங்கருங் கண்டத் தண்ட வானவர்கோன்
 மருவிடந் திருவிடை மருதே ! — 10

திருச்சிற்றம்பலம்

கருவூர்த் தேவரருளிச் செய்த திருப்பதிகப் 10 க்குச் செய்யுள் 103.

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இதில், 'கணமிரிகுடுமி' எனத் தொடங்கும், கோயில் (சிதம்பரம்), 'கலைகடம் பொருளும்' எனத் தொடங்கும் களந்தை யாதித்தீச்சுரம், 'தளரொளி மணி' எனத் தொடங்கும் திருக்கோட்டூர் மணியம்பலம், 'புவன நாயகனே' எனத் தொடங்கும் திருமுகத்தலை, 'நீரோங்கு வளர் கமல' எனத் தொடங்கும் திரைலோக்கிய சுந்தரம், 'அன்னமாய் விசும்பு' எனத் தொடங்கும் கங்கை கொண்ட சோளீச்சரம், 'திருவருள் புரிந்த' எனத் தொடங்கும் திருப்பூவணம், 'பெரியவர் கருணை' எனத் தொடங்கும் திருச்சாட்டியக்குடி 'உலகெலாந் தொழ' எனத் தொடங்கும் தஞ்சை ராசராசேச்சரம், 'செய்ய செஞ்சோதி' எனத் தொடங்கும் திருவிடைமருது ஆகிய பத்து தலங்களின் திருவிசைப்பாக்கள் உள்ளன. இவை பன்னிரு திருமுறைகளில் 9-ந் திருமுறையைச் சாரும். அச்சாகியுளது.

வரிசை எண் : 4422 சுவடி எண் : 1940-v

# திருவிசைப்பா

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை : 25 அளவு : 33½ × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : நம்பிகாட நம்பி பொருள் : சைவத் திருமுறை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருவரூர்—பண்—பஞ்சமம்

கைக்குவான் முத்தின் சரிவளை பெய்து
கழுத்திலோர் தனிவடங் கட்டி
முக்க ணாயகராய்ப் பவனிபோ ந்திங்(ங)னே
முரிவதோர் முரிவு மையளவுந்

முடிவு :

சத்தியாய்ச் சிவமா யுலகெலாம் படைத்த
தனிமுடி முதலுமாயம் முழுமுதற்கே
வித்துமாய் யாரூ ராதியாய் வீதிவிடங்கராய்
நடங் குலாவிவரே ! — 2
— 3, 4, 5, 6, 7, 8, 9, 10.

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இதில், 2 பாடல்களே உள்ளன. இது 9-ஆம் திருமுறையைச் சாரும். அச்சானது.



வரிசை எண் : 4423 சுவடி எண் : 1940-w

# திருவிசைப்பா

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை : 50 அளவு: 33½ × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : பூந்துருத்தி காடநம்பி பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

கோயில்—பண்—பஞ்சமம்

முத்துமணி வயிர மாணிக்க மாலைகண்மேற்
றொத்து மிளிர்வனபோற் றூண்டு விளக்கேய்ப்ப
வெத்திசையும் வானவர்க ளேத்து மெழிற்றில்லை
யத்தனுக்கு மம்பலமே யாடரங்க மாயிற்றே. —1

முடிவு :

சேடருறை தில்லைச் சிற்றம்பலத் தான்ற
னாடலதிசயத்தை யாங்கறிந்து பூந்துருத்திக்
காடனற்றமிழ் மாலை பத்துங் கருத்தறிந்து
பாடு மிவை வல்லார் பற்றுநிலை பற்றுவரே ! —10

திருச்சிற்றம்பலம்.

குறிப்பு :

இதுவும், 9—ந் திருமுறையின் பாற்படும். அச்சானது. நம்பிகாட நம்பியும், பூந்துருத்தி காட நம்பியும் ஒருவரே என்பது துணிவு.



வரிசை எண் : 4424 சுவடி எண் : 1940-x

## திருவிசைப்பா

ஏடுகள் : $\frac{1}{2}$ கி. எண்ணிக்கை : 50 அளவு : $33\frac{1}{2} \times 4$ செ.மீ. பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : கண்டராத்தித்தர் பொருள் : சைவத் திருமுறை நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கோயில் - பண் - சாளர பாணி

மின்னா ருருவ மேல்விளங்க
வெண்கொடி மாளிகை சூழ்
பொன்னார் குன்றமொன்று வந்து
நின்றது போலு
மென்னாத் தென்னா வண்டு பாடுந்
தென்றில்லை யம்பலத்து
ளென்னா ரமிர்தை யெங்கள் கோவை
யென்றுகொ லெய்து வதே ! —1

முடிவு :

வாராவின் சொற்கண்ட ராதித்தன்
அருந்தமிழ் மாலை வல்லார்
பேரா வுலகிற் பெருமை யொடும்
பேரின்ப மெய்துவரே ! —10

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இதுவும், சைவத் திருமுறை பனிரண்டனுள் ஒன்பதாம் திருமுறையைச் சாரும். அச்சாகியுளது.



வரிசை எண் : 4425 சுவடி எண் : 1940-y

## திருவிசைப்பா

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை : 50 அளவு : 33½ × 4 செ.மீ. ப கத்திற்கு: 13 வரிகள் ஆசிரியர் : வேணாட்டடிகள் பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து தமிழ்.

தொடக்கம் :

கோயில்—பண்—புறநீர்மை

துச்சான செய்திடினும் வெறுப்ப ரன்றே
யானாகப்பார்
கச்சாலுகு சிறுகதலி யிலை வெம்புங்
கரி கொள்வார்

முடிவு :

தேவே தென் தென்றிருத் தில்லைக் கூத்தாடி
நாயடியேன்
சாவாயு நினைக் காண்டலினி யுனக்குத்
தடுப்பரிதே ! —10

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இதுவும், 1-ஆம் திருமுறையைச் சாரும். அச்சாகியுள்ளது.



வரிசை எண் : 4426 சுவடி எண் : 1940-z

## பாதாதிகேசம் (திருவிசைப்பா)

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 500 அளவு : 33½×4 செ.மீ. பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : திருவாலியமுதனார் பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பண்—பஞ்சமம்

மையன மாததொரு கூறன்
 மால்விடை யேறி மான்மறி யேந்திய தடங்
கையன கார்புரையுங் கறைக்கண்டன்
 கனமழுவாளையனா ரனலாடு

முடிவு:

சிற்றம்பலத்தை யறை செனல் வான்
 கரும்பின் னணியாலைகள் சூழ்மயிலை
மறைவல் வாவி சொல்லை மகிழ்ந்தேத்துக
 வானெளிதே !

திருச்சிற்றம்பலம்

திருவாலிய முதனாரருளிச் செய்த கோயிற்றிருப்பதிக நாலுக்குச் செய்யுள் 42.

குறிப்பு :

இதில், 'மையன மாதொரு' எனத் தொடங்குவது, 'பவள்மால் வரை' எனத் தொடங்குவது, 'அல்லாய்ப் பகலாய்' எனத் தொடங்குவது, 'கோல மலர் நெடுங்கண்' என்று தொடங்குவது ஆகிய 4 பதிகங்கள் கோயில் எனப்படும் சிதம்பரத்தில் பாடப் பட்டது. இதுவும் 9-ஆந் திருமுறை.



வரிசை எண் : 4427 சுவடி எண் : 1940-z-1

# திருவிசைப்பா

ஏடுகள் : 1½ கி. எண்ணிக்கை : 150 அளவு : 35½ × 4 செ.மீ
பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : புருடோத்தம நம்பி பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கோயில் – பண் – பழம்பஞ்சுரம்
வாரணி நறுமலர் வண்டு கொண்டு
பஞ்சமஞ் செண்பக மாலை
வாரணி வனமுலை மெலியும் வண்ணம்
வந்து வந்திவை நம்மை மயக்குமாலோ

முடிவு :

பண்ணுதலைப் பத்தும் பயின்றாடிப் பாடினா
ரெண்ணுதலைப் பட்டிங் கினிதாவிருப்பாரே ! — 11
திருச்சிற்றம்பலம்
புருடோத்தம நம்பி பதிகம் 2-க்கு செய்யுள் — 22

குறிப்பு :

இதுவும், 9-ஆம் திருமுறையைச் சார்ந்தது. இதில் 2 பதிகங்கள் உள்ளன.



வரிசை எண் : 4428 சுவடி எண் : 1940-z-2

# திருவிசைப்பா

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 100 அளவு : 33½ × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : சேதிராய தேவர் பொருள் ; சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கோயில்—பண்—நட்டராகம்
சேலுலாம் வயற்றில்லையு ளீருமைச்
சால நாளயன் சார்வத னாலிவள்
வேலையார் விடமுண் டுகந்தீ ரென்று
மாலதாகுமென் வாணுதலே ! —1.

முடிவு :

பிரானென்று நன்னைப் பன்னாள்
பரவித் தொழுவா ரிடர்கண்
டிரா னென்ன நிற்கின்ற வீசன்
கண்டி ரினவண்டு கிண்டிப்
போரா நின்ற கொன்றை............

குறிப்பு :

இதில், முதல் பதிகம் பத்துப் பாடல்களும் அடுத்த பதிகத்தில் 2½ பாடல்களுமே உள்ளன. இதுவும் 9 ஆம் திருமுறையைச் சார்ந்தது அச்சாகியுள்ளது.



வரிசை எண் : 4429 சுவடி எண் : 1940-z-3

## நளச்சக்கரவர்த்தி கதை

ஏடுகள் : 47 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 33½×4 செ.மீ.
பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

வசிஷ்ட பகவான் தோத்திரம்
சமஸ்க்ருத சுலோகம்

வியாசப் வசிஷ்ட நப்தாராம்
சக்தே பௌதாம கல்மஷம் பாரசாத்மஜம் வந்தே
சுகதாதம் தபோ நிதிம் 11 இதன் பொருள்:
வியாசம்—வியாச பகவானை, வசிஷ்ட நம்தாரம்—வசிஷ்டருக்கு இரண்டாம் பேரனை, சக்தே பௌத்ரம்—வசிஷ்டபுத் திரனாகிய சக்தி மகாரிஷிக்கு முதல் பேரனை,

முடிவு :

இன்னம் என்னென்ன ஆபத்துகள் வந்தாலும் வரட்டும் சந்தோஷமாய் அனுபவிப்போம். நாம் செய்த பூருவ கருமங்கள் வந்தால் நாம் தைரியம் விட்டாலும் அதுகள் போய்விடுமா? முன் சன்மத்திலே நாம் சம்பாதித்ததுகள் இப்பவும் நாம் அனுபவிக்க வேணும். பூறுவ வினைப்பயன் மகா யோகீசுவரரையும் விட்டதா நம் — — — —

குறிப்பு :

ஐந்தாம் வேதமாகிய பாரதக் கதையின் சாரமான நளச்சக்கரவர்த்தி கதை எனக் குறிப்பிடப்பட்டுளது. தொடக்கத்தில் சமஸ்கிருத சுலோகம் தமிழ் எழுத்துக்களால் எழுதி, அதற்குப் பதவுரையும் காணப்பட்டுளது. பிறகு தமிழ்த் தொடர் காணப்படுகிறது. மிக எளிய நடை. பிழைகள் மலிவு. கதை கூறுவது போல உளது.

இது, எமது சுவடி எண் 1580/D—1687 போன்றது. வேறுபாடுகள் மிகுந்துள்ளன.



வரிசை எண் : 4430

சுவடி எண் : 1941-a

## திருவெழுகூற்றிருக்கை உரையுடன்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 700 அளவு ; 25×8 செ.மீ.
பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : திருஞானசம்பந்தர் பொருள் : சைவத் திருமுறை நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து தமிழ்.

25-வது தொகுப்பு

தொடக்கம்:

ஒருரு வாயினை மானாங் காரத்
தீரிய(ல்) பாயொரு விண்முதல் பூதல
மொன்றிய விருசுடர் ரும்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்ப முப்மூர்த்திக ளாயினை

முடிவு :

திருவெழுகூற் றிருக்கை சம்பந்தமூர்த்தி பிதா சிவபாத விருதயருத்த பதினாறு ஆயிரம் திருக்கடைக்காப்பு சம்பத்தமூர்த்தி பாடின வேததிருமறையை வட்டஞ் செய்து வருவார் பந்துநாள் செல்லும். அதுவறிந்து பிதாவுக்குத் திருவெழு கூற்றிருக்கையும், பதினாயிரம் திருக்கடைக்காப்பும் திராசிலே வைத்து நிறுத்து ஒப்பிவிச்சார். இது அதிகமாக இருந்தது. யிந்தப்படி வட்டஞ் செய்து சிவபூசை ஆகுதியும் செய்து நித்தியம் நடத்தி வந்தார் சிவபாதவிருதயர்

திருச்சிற்றம்பலம். சற்குரு மெய்கண்ட தேசிகன்
திருவடிகளே சரணம்.

குறிப்பு :

திருஞான சம்பந்தர் தன் தந்தையாருக்காகப் பாடிய விபரம் நூல் இறுதியில் தரப்பட்டுள்ளது. பிழைகள் மலிவு தலைப்பே, "திருவெளூர் திருகை" என்றுளது. இந்த ஒருபாடலைப் பாடினால், திருஞான சம்பந்தர் இயற்றிய அத்தனை பாடலையுடு பாடியதாகும்.



வரிசை எண் : 4431 சுவடி எண் : 1941-b

# சிவபூசை அட்டவணை

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25 × 3 செ.மீ
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

சிவலிங்கம் பூ(பீ)டத்தில் எழுந்தருளப் பண்ணி
சத்த குருக்களே நம கெணபதியே நம
மாகலட்சுமியே நம சதாசிவபூசை
குருப்பியோ நம.

முடிவு :

அத்திராய நம வென்று இரண்டு
பாதத்திலேயும் சாத்தி, பாத்தியாச மனற்கியங்
கொடுத்துப் பின்பு தூபதீபங் கொடுக்க

குறிப்பு :

இது, 'ஆன்மார்த்த மூர்த்தி பூசை' எனப்படும் சிவபூசை முறையினைக் கொண்டது.



வரிசை எண் 4432 சுவடி எண் : 1941-c

# சிவபூசை செய்ய (முறை)

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை: 200 அளவு : 25×3 செ.மீ
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சிவபூசை செய்ய—சூரியா, சந்திரா
அக்கினி மானதம் இருதயம் சிரசு
வேதம், சாத்திரம் புராணம் ஆகமம்
கலைக்கிஞானம், மணல், மண், மா, விபூதி
குங்குமம்

முடிவு :

வெந்துறும் வினையும் நோயும்
வெவ்வழல் விறகிற் பட்டதுபோல
மாறும். குருபாத முன்னிற்க
மெய்கண்ட தேசிகன்
பாதார விந்தமே கெதி

குறிப்பு :

இதில், சிவபூசையின் சிறப்பு கூறப்பட்டுளது.

வரிசை எண் : 4433 சுவடு எண் : 1941-d

# பாத்தியலிங்க பூசை

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 250 அளவு : 25×3 செ.மீ

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பாத்தியம் தாபிக்கிறது
பாவகரம் ஆரோக்கியம்
ஆசமனம் தாமிக்க ஐஸ்வரியம் உண்டாம்
திருமஞ்சனம் ஆத்திவ வத்திரம்
பொட்டு வடித்து திக்கு பெந்தனம் அவகுண்டனம்
செய்து

முடிவு :

ஆழ்ந்த சிலத்திலே மிருத்து லிங்கம் எழுந்தருளப்பண்ணி
சிவ சூரியாய நம என்று அற்சித்து நமக்கரித்து
விபூதி சாத்தி மூலம் 128 உருவும். அகோரம் 28
உருவும் செபிக்கவும்
பாத்திய லிங்க பூசை முற்றும்
மெய்கண்ட தேசிகர் பாதமே கெதி

குறிப்பு :

இது, சிவ பூசையுள் ஒருவகையைக் குறிப்பது



வரிசை எண் : 4434

சுவடி எண் : 1941-e

# லயாங்கம பூசை

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 500 அளவு : 25×3 செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

லயாங்கம பூசை

பதினொரு புஷ்பம் சாத்தி ஈசான மூர்த்திணாயநம
என்று சிரசில் சாத்த, தத்புருஷாய நம என்று
முகத்தில் சாத்தி

முடிவு :

கால்கை சுத்த பண்ணி ஆசமனம் பண்ணி
பிருத்தீட்ச சிவம் நூற்றெட்டுக்கும் அகோரத்தில்
இருபத் தெட்டுருவும் செவித்து பின்பு புண்ணா (?)
அற்சித்து புராணத்தில் தோத்திரஞ் செய்து
சிவபூசைத் தியானம்

குறிப்பு :

இது, சிவபூசையின் மற்றொருவகை.



வரிசை எண் : 4435

சுவடி எண் : 1941-f

# சிவபூசை அட்டணை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 25×3 செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாமதேவ குய்யாய நம
சத்தியோசாத மூர்த்தியே நம
ஆதெண்டபந்தி மந்திரம் அஞ்சும்
ஈசானமுதல் சத்தியோசாதம்
வரைக்கும் அங்குட்ட விரல்

முடிவு :

பணிமாறி சுவாமிக்கு புற்பம் களிச்சு
பின்பு பாவினை அவிராகம் செய்து
ஆடைசந்தனம் சாத்தி பின்பு
கற்பூராய நம

குறிப்பு :

இதுவும் சிவபூசையின் பகுதி.



வரிசை எண் : 4436 சுவடி எண் : 1941-g

## சிவபூசை விதி

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 500 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்
சைவத்தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூசை வேதிகை
அத்திராய நமா வென்று இடம் பண்ணி
கவசத்தால் தடவிக் கோடு மிட்டு
இருதையத்தால் எட்டுத் திக்கும் பத்திரம்
வைத்து பூசை உபகரண மெல்லாம்
அத்திரத்தா லாசாரங் கூட்டி

முடிவு :

தரிசன மனத்து முன்னும் பின்னும் மலசலாதி
போசனம் தந்தசுத்தி நானத்துக்குப் பின்னும்
விபூரி தரித்துக் கொள்ளவும்
பூசைவிதி முற்றும்
ஆனந்த வல்லியம்மன் சகாயம்
நன்றாக குருவே துணை.

குறிப்பு :

இது, முறையாகக் காலையில் ஆன்மார்த்த மூர்த்தி பூசை எனும் சிவ பூசை செய்யும் விதிமுறைகளைக் கூறுகின்றது.



வரிசை எண் : 4437 சுவடி எண் : 1941-h

## சூரியமூர்த்தி

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 300 அளவு: 25 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

சூரிய பூசை பண்ண
பூசை வேதிகை
அஷ்த்திராய நம வென்று கடம் பண்ணி
கவசத்தால் தடவி கோடுமிட்டு
இறுதையத்தால் எட்டுத்திக்கும்
பத்திரம் வைத்து

முடிவு :

அற்கியம் அடுக்கி நின்மாலியம்
மாற்றி கால்கழுவி விபூதி தரித்து
பிராணாயாமம் சகளீ கரணம்
செய்து, எணற் சத்தி பிறாச்சித்தம்
செய்து விபூதி தரித்துக் கொள்ளவும்

குறிப்பு :

இது, ஆன்மார்த்த மூர்த்தி பூசைக்கு முன்பேனும் பின்பேனும், தனித்தேனும் செய்யப்படுவது.

இதன் பின்னர் பெலிக்குவகை என்ற ஒரு ஏடு உளது.



வரிசை எண் : 4438 சுவடி எண் : 1941-i

# தற்பணத்துச் சுலோகம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 250 அளவு : 25×3 செ.மீ. பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சைவத் தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

சுக்கிலாம் பிரதரம் விஷ்ட்டுணும்
சசிவர்ணம் சதுர்ப்புஜம் பிரசன்ன
வதனம் சருவ விக்கினோப சாந்தயே

முடிவு :

நீர் இறக்கத்துக்கு
நெல்லுப் பொரி ஆக அஞ்சும் சமபாகங்
வரகுப் பொரி கூட்டி திரிச்சுச்
சாமைப் பொரி சீலை வட்டி கொண்டு
கோவைப் பொரி வைத்துக் கொண்டு
புல்லுப் பொரி சீனியில் கொள்ளத் தீரும்

குறிப்பு :

இதில், 2-ஆம் ஏடு முதல் வாய்பாடு உளது.



வரிசை எண் : 4439 சுவடி எண் : 1941-j

# விக்கினேசுர மந்திரம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : .0 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ

தொடககம் :

பாதந் தினேசாய நம
சானு விகினேசுராய நம
............ஆகுவா கறாய நம
............மலம் ஏரம்பாய நம
உதரம் சேதராய நம.

முடிவு :

வாகு வாசினிய நம
வேதாந்திய நம
சரசுபதி யாதனாய நம
சரசுபதி மூர்த்திய நம
சரசுபதிய நம
புற்ப மானாய நம ஆக —15

குறிப்பு :

இதில், கணபதி மந்திரமும், சரசுபதி மத்திரமும் உள்ளன.



வரிசை எண் : 4440 சுவடி எண் : 1941-k

# நந்திகேசுரர் தோத்திரம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 25×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து தமிழ்.

தொடக்கம் :

யாது கேள்க்கினு மன்பருக் கீய்வதே யியல்பு
மாத வத்தினொடு றுப்பொடு வணங்கிடு மகிழ்வு
மோது சொல்லுப தேச நல்லுறுதியு மன்பர்
தீது செயினுஞ் சிவ லீலை யெனக்கொளுந் தெளிவும் —1

முடிவு :

துறக்கமே துறையினும் நரகிற் றோடினும்
யிறக்கினும் பிறக்கினு மிரபந்(?) துயக்கினுந்
பிறைக் கொழுந்தணிசடைப் பெருமை நின்னடி
மறக்கொணா நல்வரம் வழங்க வேண்டுமால் —5

வையநீடுக ......... திருநீறு சிறக்கவே
யென்று மன்பம் பெருகு............யுல கெலாம்.

குறிப்பு :

நந்திகேசப் பெருமானைப் புகழ்ந்து கூறி, அவரிடம், நான் இறக்கினும் பிறக்கினும், எந்த நிலை எய்தினும் உன்னை மறவதா நிலை வேண்டும் என்று ஆசிரியர் வேண்டுகிறார். இது, காரைக்காலம்மையாரை நினைவூட்டுகிறது. இறுதிப் பாடல்கள் பெரிய புராணத்தில் காணப்படுகின்றன.



வரிசை எண் : 4441 சுவடி எண் : 1941-1

# திருநீற்றுப் பதிகம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 80 அளவு : 25 × 3 செ. மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

பூலோக கயிலாச கிரிசிதம்பர மெல்லாம்
புகழ்ந்து கொண்டாடும் நீறு
பூதங்க ளஞ்சாமல் வேதங்கள் நாலும்
பொருந்தவே நின்ற நீறு

முடிவு :

சாதியாப் படைகளை வீரரைச் சூரரைச்
 சாதிக்கவந்த நீறு
சண்முகக் கடவுளான் பன்னிருகை வேலவன்
 தந்திடுமே யிலைவெண் ணீறே !

கொங்கத் தாவட கத்தரீனத் தாகு
 குத்ததா கொண்டாடிக் கொள்ளுப் நீறு
— ... ... ... ... —

குறிப்பு :

இதில், திருநீற்றின் பெருமை பேசப்படுகிறது. இது திருஞான சம்பந்தரின் திருநீற்றுப் பதிகத்தின் வேறாயது.



வரிசை எண் : 4442 சுவடி எண்: 1941-m

## காந்திமதியம்மன் பேரில் கொச்சகம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 25 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

வட்ட மதிமுகமும் வளர்காதிற் பொற்றோடும்
செட்டிச்சி உன்னுடைய சீர்வடிவுங் காண்பேனோ
அட்டதிக்குந் தான்புகழு மன்வரத நாதரன் பங்கில்
கட்டழகி யானபெண்ணே காந்திமதித்தா யாரே.

முடிவு :

ஓலையி லெழுதவொண்ணா ஒருபனையி லடங்காது
 சித்திர வற்ணாச்
சோலையிலே வந்தணையும் சண்முக வேலாயுதனே !

குறிப்பு :

இதில், அம்மன் பாடல் 2-ஆம் சிவன் பாடல் ஒன்றும் முருகன் பாடல் ஒன்றும் உள்ளன.

கடைசியில் துலுக்கச்சின்னம் என்ற தலைப்புள்ள 2 ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4443 சுவடி எண் : 1942

# வேளாளர் இயல்பு (புராணம்)

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 1000 அளவு : $2\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வரலாறு

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

முகவுரை

அரசர்க் கரசே யறம் வளர்க்குஞ் சேயே
முரசச் கொடிவேந்தே முன்னம் — பிரசமலர்ப்
புங்கவன்றன் கைத்தொழிலாற் போந்த மனுபூனூள்
தங்கருமத் தான்சாதித் தான்

முடிவு :

க்ஷத்திரியரும் வைசியரும் நாஸ்த்தியாய்
விட்டன வென்று புராணத்தில் கண்டிருப்ப—
தாகச் சிலர் வீணாய்ப் புலம்புவது
அறியாமை என்பதில் சந்தே கமில்லை
அப்படிப் புராணங் களிற் கண்டில்லை.

குறிப்பு :

இது, வேளாளர் புராணத்தை ஆய்ந்து இயற்றப்பட்டுளது. 'மேற்படி புராணம் 6-வது கவி' என்ற உள் தலைப்பு உளது.



வரிசை எண் : 4444 சுவடி எண் : 1943-a

# காலபைரவாஷ்டகம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 50 அளவு : 21×3 செ.மீ

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தெலுங்கு.

தொடக்கம் :

தேவீ ராஜ சேவ்ய மான பாவனாங்க்ரி
பங்கஜம் வியாள யக்ஞ சூத்ர
நிந்து சேகரம் கிருபாகரம்

முடிவு :

லோக கோப தாப நாசனம்
காசிகா புராதி நாத
கால பைரவம் பஜேத். ||

குறிப்பு :

இது, காசியில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள மிக முக்கியமான கடவுளான காலபைரவர் மீது பாடப்பட்டது ஆகும். வடமொழியில் உள்ளதனைத் தெலுங்கு எழுத்தில் எழுதப்பட்டுளது, ஆச்சிலும், ஒலி நாடாவிலும் வெளிவந்துளது.



வரிசை எண் : 4445 சுவடி எண் : 1943-b

# லிங்காஷ்டகம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 21×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து: தெலுங்கு

தொடக்கம்:

ப்ரம்ம முராரி சுரார்ச்சித லிங்கம்
நிர்மல காரண சோபித லிங்கம்
ஜன்ம துக்க விநாசன லிங்கம்
தத்ப்ரண தோஸ்மி சதாசிவ லிங்கம்

முடிவு :

சந்தன குங்கும லேபன லிங்கம்
பங்கஜ புஷ்ப சதார்ச்சித லிங்கம்
சஞ்சித பாப விநாசன லிங்கம்
தத் ப்ரண தோஸ்மி சதாசிவ லிங்கம்

குறிப்பு :

இது, வட மொழியில் உள்ளதனைத் தொலுங்கு எழுத்துக்களால் எழுதப்பட்டுளது இறுதியில் பலஸ்ருதியும் உண்டு.

அச்சிலும், ஒலி நாடாவிலும் வெளிவந்துள்ளது. இதனைத் தொடர்ந்து மதுரை மீனாட்சி பதம், கன்னட பதம், அன்ன பூரணாஷ்டகம், அன்னபூரணா ஸ்தோத்திரம் ஆகியவை 8 ஏடுகளில் உள்ளன.



வரிசை எண் : 4416

சுவடி எண் : 1943-c

# கோவிந்த மாலை

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 200 அளவு : 22½×3 செ.மீ

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மாலை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவே துணை

கற்பகமே யெந்தனுட கந்தனுக்கு முன்னுதித்த
கற்பகமே ஆனை முகத்தோனே—நற்பசுந்தான
நல்லா ரருள்புரிந்த நாயகமே யெந்தனுட
பொல்லா வினையதனைப் போக்கு. நன்றாக

நீடூழி காலம் வாழ்க குருவே துணை.
சூரிய மூர்த்தி துணை.

நூல்

அன்றே யிலங்கை பொடிபடச்
சீறியடும் பகழியோன் றேவிசை
...........அச்சுதானந்த கோவிந்தனே ! —1

முடிவு :

பாலிட்ட மாய்கையா நீர்போல கலந்து கருங்கலவி
நூலிட்ட தொக்குளாவர் நல்லோர்க ளிருநூறு தர
மேலிட்ட புத்தி சொன்னாலுங் கயவர்க்கு வெந்த புண்ணிற்
கோலிட்ட வாறொக்குமே அச்சுதானந்த கோவிந்தனே —30

குருபாதம் முன்னிற்க. கோவிந்த மாலை முற்றும்.
சிவசூரிய மூர்த்தி துணை.

காலம் :

491-ஆம் வருஷம் சிங்க மாதம், 6-ந் தேதி ஞாயிற்றுக்கிழமையுப் சதய நட்சேத்திரமுங் கூடின சுபதினத்தில் எழுதி நிறைந்தது முறறும்.

ஆதிநாராயணன் துணை.

குறிப்பு :

அச்சுதானந்த கோவிந்தனே என முடியும் 30 பாடல்களைக் கொண்ட இந்நூல் திருமாலின் பெருமைகளைக் கூறுவது.



வரிசை எண் : 4447 சுவடி எண் : 1943-ம்

# இராசகோபால மாலை

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 300 அளவு : 22½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மாலை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவே துணை.
காப்பு

நந்தன்மகன் மோகத் துவாரையில் வாழும்
ராசகோபால னருளாலே மாலை

விந்தை செறி பூவுலகில் நீதி சார விபரமுடனாய்
அடியேன் விரும்பும் பாடல்
பந்துமுலை வள்ளி தெய்வயானைப் பங்கன்
பாரமயிலேறி ஒயில் பவனி மீறுங்
கந்தனுக்கு முன்பிறந்த ஐங்கரத்தோன் சித்திக்
கணபதிதன் னிரு சரணங் காப்புத் தானே.

நூல்

தண்டமா மலரின் தேனைத் தனித்தனி வனத்தில் வாழும்
வண்டது யறியு மல்லால் மண்டுக மறிந்திடாது.
கண்டது கடத்துன் மார்க்க கசடற்கு நல்லோர் பொல்லா
ரண்டது தெரியாதய்யா ராசகோ பாலமாலே. —1

முடிவு :

ராசகோ பாலமாலை நாற்பது பத்து மூன்று
ஓசையாய்ப் படித்த பேர்க்கு முகத்துடனே எழுதுவோர்க்கும்
நேசமாய்க் கேட்டோர்க்கும் நிச்சய மிவர்கட் கெல்லாம்
வாசவன் பதவி பெற்று வாழ்வுட னிருப்பார் தாமே. —53

ராச கோபால மாலை முற்றும். குருவே துணை.
ஆதிநாராயணசுவாமி துணை. தேவிமாரே சகாயம்.

குறிப்பு:

இது, முன்னது போன்றது. இருவகை மாலை எழுதியது ஒருவரே போலும். பிழைகள் உள்ளன.

இதன் பின்னர் 'சங்கல்பம்' என்ற இரு ஏடுகள் காணப்படுகிறது.



வரிசை எண் : 4448 சுவடி எண் : 1943-e

# சிவப்பிரகாசக் கட்டளை

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை: 400 அளவு: 18½ × 2½ செ.மீ.
பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : சிவஞான வள்ளலார் பொருள் : சைவ சித்தாந்தக் கட்டளை நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது
எழுத்து தமிழ்.

தொடக்கம் :

பூதங்களாவன: பிறிதிவி, அப்பு, தேய்வு, (வாயு). ஆகாசம் ஆ 5.

ஞானேந்திரியங்களாவன: சோத்திரந், தொக்கு. சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் ஆக —5.

தன் மாத்திரைகளாவன: சத்தம், பரிசம், ரூப, ரச, கெந்தம் ஆக — 5.

முடிவு :

சிவானு போகம் பிறக்கச் சிவனுடனே
அக்கினிக்கு வெம்மை போலவும், நீருக்குத்
தட்பம் போலவும் சிவத்திலே யழுந்து மது
சிவபோகம்.

சிவப்பிரகாசக் கட்டளை முற்றும்
சிவமயம்

குறிப்பு :

வைசசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கையும் படிப்பவர்கள் முதலில் அறிந்து கொள்ள வேண்டிய ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவ தத்துவம் ஆகிய தத்துவங்களையும் தத்துவ விபரங்களையும், பிறவற்றையும் எடுத்துரைக்கும் உரை நடை நூல். அச்சாகி உள்ளது.



வரிசை எண் : 4449 சுவடி எண் : 1943-f

# சிவப்பிரகாசக் கட்டளை

ஏடுகள் : 19½ கி. எண்ணிக்கை : 400 அளவு : 19½ × 2½ செ.மீ.

பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : சிவஞான வள்ளலார் பொருள் : சைவதாந்தக் கட்டளை நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

குறிப்பு :

இது, முன் பிரதி போன்றது.

வரிசை எண் : 4450 சுவடி எண் : 1943-g

# தத்துவக் கட்டளை

ஏடுகள் : 7½ கி. எண்ணிக்கை : 150 அளவு : 19×2½ செ.மீ. பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தக்கட்டளை நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

பூதம் — 5 பொறி — 5
புலன் — 5 கணம் : இந்திரியம் — 5
ஞான இந்திரியம்—5. அந்தக்கரணம் 4.
நாடி — 10 வாயுவு — 10.

முடிவு :

ஆச்சரிய மனை. கை. காம இடும்பை
உதாசனம், ஆங்காரம், கடூரம். அராகம் —8
அவத்தை 5-க்கு சாக்கிரம் சொற்பனம்
சுழுத்தி துரியம் துரியாதீதம் — 5

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 164-b/D-896 போன்றது. வேறுபாடு காணப்படுகிறது.



வரிசை எண் : 4451 சுவடி எண் : 1944-a

# திருவாதவூரர் புராண(ம்)த்தில்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 40 அளவு : 20½×3 செ.மீ பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர்: கடவுண் மாமுனிவர் பொருள் : புராணம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

——— ன சருக்கம் 74.
ஞ்சித வினைக ளன்புடனாம் விழிக்க வெந்தது
விரும்பி முற் சொனனம் புரிந்த வல்வினை யுடலுடன்
கலும்ந்தி சேரருள் வருவினை.

முடிவு :

தரிப்பிலாது சென்றே திருவுற வணங்கித்
தக்க போனக மளித்துவர்க் கெளிதா
யிருப்பர்தாம் வாடியவர்க் கடியா ரென்பர்
நானெனு மிருஞ் செறுக்கப்பார் —2.

குறிப்பு :

இதில், திருப்பெருந்துறைச் சருக்கத்தில் 56-ஆம் பாட்டு, 57, 73-ஆம் பாடல்கள் உள்ளன.



வரிசை எண் : 4452 சுவடி எண் : 1944-b

## குருதோத்திரம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 40 அளவு : 20½ × 3செ.மீ

பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வரலாறு

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

(தி)ரு நந்தி குருசனக் குமார
சத்திய ஞான தேசிகனை களடிசேர்
பரஞ்சோதி மாமுனிகளுப் புதியாம்
வெண்மை மேவிய சீர்
மெய்கண்ட திரலாமாரர் விரவு புகழ்

முடிவு :

திருஞான சம்பந்தர் திகழு அழகி
திருச்சிற்றம்பல திருநாவுக்கரசர் குறவர்தர்ம
நகர் மேவு சச்சிதானந்த குரவர் தாள் வில்லா
முத்துக்குமர தேசிகர் கருணை தாணுரூபமாகி
குருஞானசம்பந்தர். கந்தப்ப தேசிக மாசிலாமணிமூர்த்தி.

குறிப்பு :

இது, திருவாவடுதுறை ஆதீனத்து குருபரம்பரை போலும்.



வரிசை எண் : 4453 சுவடி எண் : 1944-c

# தத்துவக்கட்டளை

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 1000 அளவு : $20\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்

............ர மாகிய பரமேசுரன்
தராதலம் படைக்கத் தானினைந்தருளி
பராபரத்திற் பரந்தோன்றி பரத்திற் சிவந்தோன்றி
சிவத்திற் சத்தி தோன்றி சத்தியில் நாதந்தோன்றி
நாதத்தில் விந்து தோன்றி.

முடிவு :

அப்படிக்கு அவரவர் செய்த புண்ணிய பாவத்துக் கீடாகயே
யெடுத்த செனனத்தினாலே குருவின் கடாக்ஷம் பெற்று
ஞான நிலையே நிலையாக மற்றொன்றும் நினையாமல்
நின்றநிலை ஞான நிலை யென்றறிக.
தத்துவக் கட்டளை முற்றிற்று

ஸ்ரீகாந்திமதி சாலீவாடீஸ்வர, வேணுவன மகாலிங்கம்
பாதார விந்தமே கெதி.

காலம் :

1017-ம் வருஷம் சார்வரி வருஷம் மாசிமாதம் 2-ந் தேதி சுக்கிரவார மெழுதியது.

குறிப்பு :

இதில், இரண்டு மூன்று விதமான தத்துவக் கட்டளைகள் உள்ளன. அதில் சேஷாத்திரி சிவனார் எழுதியது ஒன்று. பிற அறியக்கூடவில்லை. இது, எமது சுவடி எண் 995-f/D-1867 போன்றது எனலாம்.

இதன் பின்னர் 'அனாகதம் முற்றும்' என முடியும் தொடக்கம் இல்லாத 2) ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4454 சுவடி எண் : 1944-d

# சாதசிவரூப அட்டணை

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 700 அளவு : 21×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : கண்ணுடை வள்ளலார்? பொருள்: சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமென்றும் சதாசிவமென்றும்
மகேசுனென்றும் மூன்று வகைப்படும்
இவையிற்றுள் சிவம்—நிட்களம்
சதாசிவம் சகள நிட்களம்
மகேசுரம் சகளம்.

முடிவு :

யிப்படி யிடை விடாம லிறுதைய
கமலத்திலே பூசிக்கிற வனுக்குச்
சாயுச்சிய பத முண்டு முண்டு

சிவமயம்:
சதாசிவ ரூப அட்டவணை முற்றும்
திருஞான சம்பந்த குருவே நம: கொங்கராய
வேணுவன லிங்க மெழுத்து.

காலம் :

1019-ம் வருஷம் சோபகிருது வருஷம் அற்பசிமாதம் 7-ந்தேதி

குறிப்பு :

இது, கண்ணுடைய வள்ளலார் இயற்றிய சிதாசிவ ரூபத்தின் விளக்கமாகும். அடுத்த நூல் காண்க.



வரிசை எண் : 4455 சுவடி எண் : 1944-e

# சதாசிவ ரூபம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 700 அளவு : 21×3½ செ.மீ. பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : கண்ணுடைய வள்ளலார்? பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

உயர் மறைபுகழ் சிவனோங்கு சதாசிவ
னியலு மகேசனென மூன்றா யவை யருவே
யருவுரு வுருவா யடைவே யரிதுண ரொன்றைந்
தைய யைந்தாகி யொரு தொகை முப்பத் தொன்றாகும்மே.

முடிவு :

அந்தரியாகமும் மாபுரயாகமு
மிந்த நெறி பிறிவில்லா தாதலிற்
புந்தியில் ஞானபூசை யென்றது.
இப்படி யிடையறா வியைக முலத் தற்புத
முதல்வன்ன யற்சனை புரிபவர் தப்பற வடைவார்
சாயுச்சியமே.
சதாசிவரூப முற்றும்

குறிப்பு :

• எமது சுவடி எண் 298-f/D 834-ன் வேறாயது போல் காணப்படுகிறது. சைவாக மங்களுட் கூறப்பட்ட பஞ்ச சாதாக்கிட விளக்கம் கூறுவது இது.

வரிசை எண் : 4456

சுவடி எண் : 1944-f

# வேணுவன நாதாஷ்டகம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 200 அளவு : 21×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : கிரந்தம் (வடமொழி)

தொடக்கம் :

ஹரி : ஓம் சுபமஸ்து

வந்தே தட்சிண கைலாசம்
வந்தே ஹேமாப்ஜி நீ மபி
வந்தே ப்ரீஹி வ்ரதி நாதம்
வந்தே காந்தி மதீஸ்வரீம் —1

முடிவு :

ஸ்ரீவம்ச காந்தார சுநாயகாய
ஸ்ரீவேத வம்சாமல மூர்த்திகாய
ஸ்ரீபாமதீ முக சரோஜ சுபாஸ்கராய
ஸ்ரீதான நாதாய நமஸ்ஸிவாய. ||

குறிப்பு:

இதில், வேணுவன நாதாஷ்டகம், விஷ்ணு அநவரததான நாதஸ் தோத்ரம், தான நாத ஸ்தோத்திரம், (2) வேணுவன நாதாஷ்டகம் ஆகிய நான்கு நூல்கள் உள்ளன. ஏடுகள் 1 + 1 + 2 + 2 = 6.



வரிசை எண் : 4457

சுவடி எண் : 1944-g

# அடங்கன் முறை துகை (திருப்பதிக்கோவை)

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 300 அளவு : 2 ×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்
பொருள் : சைவத் திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

சம்பந்த மூர்த்தி நாயனார் (திரு)முறை மூன்றுக்குப் பதிகம் 384.

திருநாவுக்கரசு நாயனசர் (திரு)முறை மூன்றுக்குப் பதிகம் 312.

சுந்தரப் பெருமாள் நாயனார் (திரு)முறை ஒன்றுக்கு பதிகம் 101. ஆக முறையேழுக்குப் பதிகம் எழுநூற்றுத் தொண்ணூற் றேழுக்கு தலங்கள் ஒன்றொன்றுக்கு பதிக மித்தனை யென்ற திருமுறை க்ஷேத்திரக்கோவை.

முடிவு :

முப்பத்தி நாலு பதிக மிருக்கிற திருவாரூர்த்தலம்—1 எழுபத்தொரு பதிக மிருக்கிற சீகாழி—1. ஆகப் பன்னிரண்டு பாட்டிலு மிருக்கிற தல மிருநூத்தி யெழுபத்து நான்கும் சரி.
ஸ்ரீ காந்திமதி சாலிவாடீசுர வேணுவன மகாலிங்கம் சகாயம்

ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸாய நம:

குறிப்பு :

க்ஷேத்திரக்கோவை எனும் திருப்பதிக் கோவையில் இதில் 17 பாடல்களே உள்ளன. இது எமது சுவடி எண் 436–a/D–814 போன்றது. இதில் 19 செய்யுட்கள் இருக்கின்றன. தேவார ஆசிரியர்களின் பாடல் தொகையும், பாடப்பட்ட தலங்களும் இதில் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4458 சுவடி எண் : 1944-h

# விவேக சிந்தாமணி

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 21×3½ செ.மீ

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : நீலகண்ட சுவாமிகள் பொருள் : நீதிநூல்

நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

கணபதி துணை முருகன் துணை

நீதிச் சிந்தாமணி யென்றும், வெள்ளைச் சிந்தாமணி யென்றும்
வழங்குகின்ற விவேக சிந்தாமணி. சிவஹா மகாதேவ.

அல்லல் போம்............கை தொழுதக்கால்

நூல்

ஆபத்துக் குதவாப் பிள்ளை யரும்பசிக்குதவா வன்னம்
தாபத்தைத் தீராத் தண்ணீர் தரித்திர்மறியாப் பெண்டீர்

முடிவு :

துங்கவன் கரையில் போட்டால்
சூரியன் காய்ந்து கொல்வான்
தங்களி னிலமை கெட்டா லிப்படித்
தயங்கு வாரே ! —13

ஸ்ரீ காந்திமதி சாலிவாடீசர் வேணுவன மகாலிங்கம்
பாதார விந்தமே கெதி.

குறிப்பு :

உலகியல் அறங்கள், மாந்தர் இயல்புகள் முதலியவற்றைத் தொகுத்துக் கூறுவது அச்சாகியுளது.



வரிசை எண் : 4459 சுவடி எண் : 1944-i

# பெரிய புராணத்தில் கண்ட தோத்திரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 60 அளவு : 21×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : சேக்கிழார் பொருள் : திருமுறை
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

உலகெலாமுணர்ந் தோதற் கரியவன்
நில வுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

தடுத்தாட் கொண்ட புராணத்தில்

ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள
அடியனே னறிவிலாமை கண்டுமென் னடிமை வேண்டிப்
படிமிசைக் காரில்வந்திங் கழுது செய்பரனே போற்றி
துடியிடை பாகமான தூயநற்சோதி போற்றி
பொடியணி பவளமேனிப் புரிசடைப் புராண போற்றி. —20

குறிப்பு :

இதில், பெரிய புராணத்தில் வரும், மிகச் சிறந்த பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. தடுத்தாட் கொண்டபுராணம், தில்லை வாழந்தணர் புராணம், இயற்பகை நாயனார் புராணம், இளையான்றன் குடிமாற நாயனார் புராணம், கண்ணப்ப நாயனார் புராணம், அரிவாட்டாய நாயனார் புராணம் ஆகிய புராணங்களின் செய்யுட்கள் உள்ளன.



வரிசை எண் : 4460 சுவடி எண் : 1944-j

# திருவெழு கூற்றிருக்கை

ஏடுகள் : 1¼ கி. எண்ணிக்கை : 60 அளவு : 21×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : திருஞானசம்பந்தர் பொருள் : திருமுறை
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பண் வியாழக் குறிஞ்சி

ஓருரு வாயினை மானாங் காரத்
தீரியல் பாயொரு விண்முதல் பூதல
மொன்றிய விருசுட ருப்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்ப மும் மூர்த்திக ளாயினை

முடிவு :

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணிய னறியு
மனைய தன்மையை யாதலி னின்னை
நினைய வல்லவ ரில்லை நீணிலத்தே !

நீணிலத்தை நீண்டோனுங் கீணிலத்தைக் கீண்டோனுங்
காணவொப் போன்றில்லாக் கழலிணைகள் —வேணுபுராங்

ஞானசம் பந்தனுரை நாடோறு மேத்துவா
ரூனசம் பந்தமு றார்.

திருச்சிற்றம்பலம்.

குறிப்பு :

சுவடி எண் 1941-a காண்க.



கை எண் : 4461 சுவடி எண்: 1944-k

# சொக்கநாத கலிவெண்பா

ஏடுகள் : 2½ கி. எண்ணிக்கை : 10 அளவு : 21×3½ செ.மீ
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : மறைஞான சம்பந்தர் பொருள் : சைவத்
தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

ஆடரவஞ் சூழ்மதுரை யம்மானே யன்பருடன்
கூடிவிளை யாடிவருங் கோமாய — நீடுபுகழ்
மென்மேலு மென்றனக்கு மேவியிடம் பொல்லாத
வென்மேல் வினைகெடுப்பாயே ! —1

முடிவு :

கெடுங்காலம் வந்தாற் கெடுப்பைக் கதியில்
விடுங்காலம் வந்தால் விடுவை — கொடுத் தவங்கள்
பண்ணிடினும் பாவம் பயிற்றிடினு மாரெனு
மண்ணலே சொக்கநா தா ! —28

குறிப்பு :

இது, 'சொக்கநாத வெண்பா' எனப்படும், கலிவெண்பா அல்ல திருத்தருமபுர ஆதீன ஆன்மார்த்த மூர்த்தியாகிய சொக்கநாதப் பெருமான் மீது பாடப் பட்டதாகும். 'சொக்க நாதா' எனும் ஈற்றுச் சொற்களைக் கொண்டது அச்சாகியுளது.



வரிசை எண் : 4462 சுவடி எண் : 1944-l

# திருவெழு கூற்றிருக்கை-உரையுடன்

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை: 700 அளவு: 20½ × 4 செ.மீ.

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : திருஞான சம்பந்தர் பொருள் : சைவ திருமுறை நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சிவமயம் குமரன் துணை.
ஓருருவாயினை எ.து. எல்லா தத்துவங்களையுங் கடந்து
வாக்கு மநாதிகளுக் கெட்டாதே யிருந்துள்ள பஞ்சகிருத்தியங்களை
நிகழ்த்த வேண்டி தன்னிச்சையாலே யெடுத்துக்கொண்ட திருமேனியை
யுடைய தாயினை

முடிவு :

அனேக தன்மைய ராதலி னின்னை
நினைய வல்லவ ரில்லை நீணிலத்தே !
அத்தனை நினைய வல்லவரில்லை யென்றவாறு
அத்தனை நினைய வல்ல பதத்துக்குப் பிறப்பில்லை நீணிலந்
தென்றவாறு.
ஸ்ரீ திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமி பாதாரவிந்தமே கெதி.

குறிப்பு:

இது. 1941-a போன்றது.



வரிசை எண் : 4463 சுவடி எண் : 1944-m

# சுப்பிரமணியர் கலிவெண்பா

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 350 அளவு : 20½ × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : குமரகுருபர சுவாமிகள் பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேரிய
பாமேவு தெய்வப் பழமறையுந்—தே மேவு
நாதமு நாதாந்த முடிவு நவைதீர்ந்த
போதமுங் காணாத போதமா—யாதிநடு

முடிவு :

தாயும் பழைய வடியாருடன் கூட்டித்
தோயும் பரமோகந் துய்ப்பித்துச் — சேய
கடியேற்கும் பூங்கமலக் கால் காட்டி யாட் கொண்
டடியேற்கு முன்னின் றருள் !

நயினார் துணை

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, 'கந்தர் கலி வெண்பா' வாகும். இது அச்சாகியுளது. இதன்பிற செய்திகளை எமது சுவடி எண் 823-c/D-1313-ல் காண்க.



வரிசை எண் : 4464 சுவடி எண் : 1944-n

# பெரியபுராணச் சுருக்கம்

ஏடுகள் : 40 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 20½×4 செ. மீ.
பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : சேக்கிழார் பொருள் : திருமுறை
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்
மனுச் சக்கரவர்த்தி புராணம்

மனுச் சக்கரவர்த்தி யரசாரூர் வாழு
மனுமைந்தன் பவனிரத வண்டிக் காலில்க்
குனித்து விழுந்திறந்திடு மாங்கன்று தாய்போய்க்
கோட்டினால் மணி புடைத்து.

முடிவு :

திருப்புட வூரினிற் சேர்த்து வெளிப்பட
வெல்லார்க்குந் திகழு முலகோர் தினமும்
போற்றவருள் செய்து முற்றும்.

திருச்சிற்றம்பலம் பெரிய புராணச் சருக்கம்
முற்றுப் பெற்றது. வேணுவன தேவதேவி சகாயம்.

ஸ்ரீ காந்திமதி சாலீவாடீஸ்வர வேணுவன
மகாலிங்கம் துணை. கனகசபை சிற்சபை நடநசபை
தேவசபை ராசசபை வாழ்க.

குறிப்பு :

இது, பெரிய புராணத்தின் பாடல்களின் சுருக்கமாகும். இதன் பின், ''மேதை யருக்கீசம் விடை, லை'' எனத் தொடங்கும் பாடலுள்ள ஏடொன்றுளது.



வரிசை எண் : 4465 சுவடி எண் : 1944-0

# சிவப்பிரகாசக் கட்டளை

ஏடுகள் : 19 கி எண்ணிக்கை : 400 அளவு ; 20½×4 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : திருஞான வள்ளலார் பொருள் : சைவ சித்தாந்தக் கட்டளை
நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 1943-e போன்றது.



வரிசை எண் : 4466 சுவடி எண் : 1945

# விருத்தாசல புராணம் உரையுடன்

ஏடுகள் : 147 கி. எண்ணிக்கை: 7000 அளவு: 16½×5 செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : ஞானக் கூத்த சிவப்பிரகாச தேசிகர்
பொருள் : தல புராணம் நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றுமுளது
எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

பாயிரச் சருக்கம்

திருவுங் கல்வியுஞ்...... ........பேணுவாம்

எ.து. ஆற்றுமா மாயா சம்பந்தமான யிந்திரிய
கரணாதிகளுடனே கூடி நிற்கிற படியினாலே

முடிவு :

பெருமோக்ஷச பதவியிலே அடைவார்க
ளிந்தப் புராணத்தை வறிந்து கைவிடாதே
வைத்திருக்கிற பேருக்குயந்த பலன் தப்பா தென்றவாறு
—29 வென்றவாறு.

திங்கள் மும்மழை பெய்யச் செழும்புவி பொங்கி வாழப்
புரவல ரோங்குக நங்கள் சங்கார் பூசை நலம் பெறச்
சங்கர னடியார்கள் தழைக்கவே —30

சசிவன்னச் சருக்கம் முற்றும் ஆகச் சருக்கம் 18-க்கு கூடுதல் விருத்தம் 432.

காலம் :

975-ஆம் வருஷம் அற்பசி மாதம் 24-ந் தேதி சத்தமியும் புனர்பூச நட்சேத்திரத்தில் எழுதி முகிந்த விருத்தாசல புராணம் முற்றும்.

சிவ சுப்பிரமணிய தேசிகன் துணை,

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 268/D-473, எண் 979/D-1192 போன்றது.



வரிசை எண் : 4467 சுவடி எண் : 1046-a

# எண் நட்சத்திரம்

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 200 அளவு : 14×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திக் கெட்டுச் சூல மமைத்துச்
சிறந்துள்ள புள்ளிமூன்றி
மத்தியிலருக்கனாளை வலமதா
யெண்ணி வந்தால்

முடிவு :

| பூரட்டாதி | ரேவதி |
|---|---|
| கொழுங்கோல் | கடைமீன், தோணி |
| நாளி, புரட்டை | மர்க்கலம், தாயம் |
| ஆக—3 | நாவாய், நவ்வி |
| | ஆக — 6. |

உத்திரட்டாதி

முரசு, வேந்தன்
அறிவள் ஆக-3

குறிப்பு :

இதில், ராசிகட்கும், கோள்கட்கும் உள்ள வெவ்வேறு பெயர்கள் கூறப்பட்டு உள்ளன.



வரிசை எண் : 4468 சுவடி எண் : 1946-b

# நட்சத்திர உச்சமறியும்படி

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 200 அளவு : 14×3 செ மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சோதிடம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

அசுபதி அறுமீன் குதிரைத்தலை போல
இசைபெற கடகத்தில் 2 1/8
பரணி மூன்று மடுப்போல
அரணுறு கடகம் 5 1/8

முடிவு :

வியாழன் சனி வல்லூர் மரணம்
திங்கள் காக மரணம்
செவ்வாய் கௌளி மரணம்
புதன் மயில் மரணம்

குறிப்பு :

இதில், நட்சத் திங்களின் உச்சம் நீசம் அறியும் வகை கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4 69 சுவடி எண் : 1946-c

## நவக்கிரக பலன்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 300 அளவு : 14 × 3 செ. மீ

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஆதி 7 மிடம் பாருவை
யின் வீடு சிங்கம்
உச்ச வீடு மேஷம்
நீச வீடு துலாம்
உறவு திங்கள் செவ்வாய்.

முடிவு :

மந்திர காறகன் கேது
நிறம் கறுப்பு, சிகப்பு
மறு இடுப்புக்குக் கீழே
இடது பறத்திலம்
ஆவுடுக்கு புருஷகோள் கெது
சிறியகோள் சாதி நீஷி நிறுதி திசை

குறிப்பு :

ஞாயிறு முதலான ஒவ்வொரு கிரகத்துக்கும் உள்ள செயல்பாடுகள் கூறப்பட்டுள்ளன.

வரிசை எண் : 4470 சுவடி எண் : 1946-d

# இராசி பலன்

ஏடுகள் : 11 (54-64) கி. எண்ணிக்கை : 300 அளவு : 15×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் ஸ்ரீசாதகம்

ஒன்றினில் புகள்மால் கூடி
உரைத்திடில் சுகமுண்டாகும்
நன்றிது பாவ ராட்சி யுட்ச
நட்பேறி திற்கிற

முடிவு :

பன்னிரண் டதனில் நற்கோள்
நின்றிடப் பணிந்த சொல்லாய்
மன்னிய சயன மாகும்
சுகத்தொடு வழங்குந் தன்மம்
உன்னிய பாவராகில் வியாதிதுற்
சிலவுண்டாமே யென்னவே திரியழுக்கு
வியம்பினா ரியல்வுள்ளோரே ! — 22

பன்னிரண்டு ராசிக்கும் பலன் முற்றும்

குறிப்பு :

இதில், ராசிபலன்கள் பனிரண்டுக்கும் கூறப்பட்டுள்ளன.
இதன் பின்னர், 'கெண்டாநதம்', 'சாதக பாவம்' எழுதிய 2 உதிரி ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4471 சுவடு எண் : 1946-e

# சந்திர காவிய வெண்பா

ஏடுகள் : 17 (37-53) கி. எண்ணிக்கை : 400 அளவு : 14 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

அஞ்சொன் பதுக்கதிபர் பாவிசுப ரானாலு
மிஞ்சுபலன் கொடுப்பார் மேன்மூன்றா—ரெஞ்சுபதி
னொன்றுக் கதிபதியு மிப்படியூ னறிவரில்
பொன்றசுப மேகொடுக்கும் போதே. — 1

முடிவு :

யென்றெவரும் போற்றி லீசரருள் பெறுவா
மன்னுதனில் மெய்யா மதி. — 81

சந்திர காவியம் முற்றும்

13-ம் பாட்டு கேந்திர கோணாத ருக்குப் பேதஞ்

× × + ×

மின்னகளைப் பார்த்தறிவா யென்று — 13

முற்றும்.

குறிப்பு :

இது, சோதிடத்தை வெண்பா யாப்பில் அமைத்துப் பாடப்பட்டுளது. பிழைகள் அதிகம்.



வரிசை எண் : 4472 சுவடி எண் : 1947

# சகாதேவ நூல்

ஏடுகள் : 103 கி. எண்ணிக்கை : 1200 அளவு : 16½ × 2 செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : சகாதேவர் பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ் .

தொடக்கம் :

சகாதேவர் சாத்திரம் நானூ றுக்குள்
………… மூன்று தரமல்லை சொல்ல
யெட்டில் கழித்து சேஷங் கண்டதை

முடிவு :

ஊருக்குப் போன பெண்ணை யழைத்துவர
வாழ்ந்துண் டிருப்பாள். ஊருக்குப் போனவள்
வியாதியாய் வர நாள் செல்லும்
உன்னைக் கலங்கொள்ளப் பாலுஞ் சோறும்
பசியாம லுண்டாம்.

குறிப்பு :

எழுத்துக்கள் தெளிவில்லை, இது எமது சுவடி எண் 890/1456 போன்றது. முதற் பகுதி ஒருவிதமாகவும், பிற்பகுதி கயிறு போட்டுப் பார்க்கும் சுவடியாகவும் உள்ளது.



வரிசை எண் : 4473 சுவடி எண் : 1948-a

# அனுட்டான அகவல்

ஏடுகள் : 4 (முதலேடு இல்லை) கி.எண்ணிக்கை: 120 அளவு: 15 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : கமலை ஞானப்பிரகாசர் பொருள் : சைவ சமய சாத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

பெருவிர லணிவிரல் பிடித்த வெண்ணீற்றால்ச்
சிரமுதற் பரி ........ செமத்திரத்தால்
ஆசா ரத்தினோ டைந்திடஞ் சீர்முத
லீசான ............ கொண்டிட்டு

முடிவு :

கமலை ஞானப் பிரகாச னற்புத மாகிய
வாகமப்படியே நயமுறு மன்புடன்
நவில்க வாப்படி நியமம் புரிவோ நீடு
வாழ்பவரே !

அனுஷ்டான அகவல் முகிந்தது முற்றும்.
யினரே யெனுமீசன் ..............வைத்து.......... ஜெயாயநம

குறிப்பு :

இது, சந்தியா வந்தனம்போல தீக்கை பெற்ற சைவர்கள் காலையில் செய்யும் செயல்முறை வழிபாடாகும்.



ஃபிரிஸ்ச எண் : 4474 சுவடி எண் : 1948-b

# சிவபூசை அகவல்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 300 அளவு : 15×3 செ.மீ.
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : கமலை ஞானப்பிரகாசர் பொருள் : சைவத் சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

ஓசைச் சிவாகமத்தி லுள்ளபடி கண்டமைத்த
பூசைத் திருவகவல் போற்றவே—யாசில்

பொருளையுஞ் சொன்னயமும் போதத்து ளல்கக்
கருணைபுரி வாரணமே காப்பு !

முடிவு :

சிற்குண னுரைத்த சிவாகம நோக்கி
நற்கம லைவாழ் ஞானப் பிரகாசன்
சொல்லிய பூசைத் தொகையினைப் பழுதற
வல்லவர் வீடுற வல்லவர் தாமே !

திருச்சிற்றம்பலம்

சிவபூசையகவல் முற்றும். பொன்னம்பல குருவே துணை.
கற்றவர்...........செப்பே.

குறிப்பு :

இது, முறைப்படி தீட்சை பெற்ற சைவர்கள், ஆன்மார்த்த மூர்த்தி பூசை எனும் சிவபூசை செய்யும் முறைமை கூறுகிறது.



வரிசை எண் : 4475 சுவடி எண் : 1948-c

# சிவ கவசம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 150 அளவு : 15×3 செ. மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : வரதுங்கபாண்டியன் பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

பங்கயத் தவிசின் மேவி
யிருந்துடற் பற்று நீக்கி
யங்குநற் பூத சுத்தி
யடைவுடன் செய்து பின்னர்

முடிவு :

கடவுள்ணீ ரவனுடல் கவினச் சாத்தியே
யடுகரி பன்னிரண் டாயி ரத்துட
நெடுவலி யளித்து நீ நீடு வாழ்கென
வடுவற வேத்தியே வழிக்கொண் டானரோ ! —28

திருச்சிற்றம்பலம்

சிவகவச அகத்தியாய முற்றும் சுபமஸ்து.
திகடச் சக்கரச்..........போற்றுவாம்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 437-e/D-820 போன்றது.



வரிசை எண் : 4476 சுவடி எண் : 1948-d

## விக்கினேசுரர் தோத்திரம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 150 அளவு : 15×3 செ.மீ, பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர் : கமலை ஞானப்பிரகாசர்? பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

துதி கொண்டு நினடி தொழுங்கருணை
தரதமிழ் தொடுக்கின்ற வெகு வித்தகத்
துன்பங்க ளணுகாத யின்பங்கள்
தரநல்ல சுகசீவன பெருமை தர

முடிவு :

யெனதழைபால் நல்லாய யுனதாமால்
நீர்நிழல் போல யில்லா அருவாகி
நின்றானை ஆற்றி வாழுங் கெரு
உருவாகித் தொன்றானே !

முற்றும்
சுபமஸ்து

குறிப்பு :

இது, விநாயகர் மீது பாடப்பட்ட தோத்திரப் பாடலாகும்.



வரிசை எண் : 4477 சுவடி எண் : 1948-e

# விக்கினேசுரர் கவசம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 15×3 செ.மீ.

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : கமலை ஞானப்பிரகாசர் ? பொருள்: சைவத் தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

பூமலி நீரின் மூழ்கிப் புனிதமாய்ப் பூதி சாத்தி
கோமணி ய(ரு)ஞ் சோதி யப்பனுக் குக்கூற வேதன்
காமுறு நந்திக் கோதுங் கணபதி கவசத் தன்னை
சேமவெங் கரன்றாள் போற்றிச் செய்முறை செப்பல் செய்வாம்.

முடிவு :

பிரம சாரியனே போற்றி பிஞ்ஞகன் பேறே போற்றி
தரைமுதல் மூன்று லோகந் தழைத்திடுஞ் சதுரா போற்றி
யாவணி யுதரா போற்றி யனேகரூ பானாய் போற்றி
சரணம்வந் தடைந்தோர் துன்பம் தவிர்த்தருள் தந்தி போற்றி. —20

விக்கினேசுரர் கவசம் முற்றும்.

சுபமஸ்து

குறிப்பு :

கவசமாக இருந்து நம்மைக் காக்க விநாயகனை வேண்டுவது.



வரிசை எண் : 4478 சுவடி எண் : 1948-f

# சுப்பிரமணியர் கவசம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 15×3 செ.மீ

பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர்: கமலை ஞானப்பிரகாசர் ? பொருள்: சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து தமிழ்.

சீலமாய்ப் பூதி யக்கமாலை மெய்சேரத்
திருத் தூய்மை யெனுந் றான்
நண்ணியுமையவ ளீசனாப் பண்
வாலமெய் யொளிர் வைகுந்

முடிவு :

மையிலாத சிறுவனா விவைவின் மிக்க
சிறப்பொடு முயிர்ப்பர் மாதோ ! —16

சுப்பிரமணியர் கவசம் முற்றும்.
அக்கனருள் சேர் வயலை........வறணம் பவளந்தான்.
பாட்டு முற்றும்
சுபமஸ்து

குறிப்பு :

இது, முருகனை விரும்பித் தன்னைக் காக்கும்படி வேண்டுதல்.



வரிசை எண் : 4479 சுவடி எண் : 1948-g

## தேவி கவசம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 15×3 செ.மீ.
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர்: கமலை ஞானப்பிரகாசர்? பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

நன்றாக

அங்கையிற் கரகந் தாங்கும்
பிரமாணி யருள் னோடு
துங்கமென் சென்னி காக்க
வயினவிது கணிலாக

முடிவு :

கந்தன்மெய்க் கவச மோதி நீர்
கருதி யுண்ணில்ச்
சுந்தரப் புதல்வ ருண்டாம்
பாற்கரை சுரபிக் கெல்லாம்

*மிந்தமந் திரநீ ரோதி*
*விறைக்கிற பாறைங்கி யூறுஞ்*
*சந்தத முரைப்போர் முத்தி*
*சார்வர் சத்திய மீதாமால்* —15

தேவி கவசம் முற்றும்.

அரிசனம் பூசமாலை.........கிடத்த லாயினத்தே !

சுபமஸ்து

குறிப்பு :

இதில், பிழைகள் மலிவு. சத்தியைத் தன்னைக் காக்குமாறு வேண்டுதல். முன் நூல்களெல்லாம் கமலை ஞானப் பிரகாசர் எழுதியதாக உளதால் இதுவும் ஞானப் பிரகாசரோ என ஐயம். ஒவ்வொரு கவசத்தின் பின்னும் ஒவ்வொரு பாடல் உளது.



வரிசை எண் 4480 சுவடி எண் : 1948-h

# சிவபூஜா பத்ததி

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை: 200 அளவு : 15 × 3 செ.மீ
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : கமலை ஞானப்பிரகாசர் பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி : ஓம்

சிவபூஜாத் தானத்திற் சென்று ... ...
தரத்தினால் செலம்விட்டு க வசத்தினால்
கழுவி கவசத்தால் கோட்ட மிட்டு

முடிவு :

பசுப்பூசை பண்ணி வாயுறை குடுத்து
ஆகம பூசை, ஆலைய தெரிசனம்
பண்ணிக் கொண்டு போசன விதி முறைப்படி
புசிக்கக் கடவன்
சிவபூசை விதி முற்றும்

காலம் :

1915-ஆம் வருடம் ஆடிமாதம் 11-ந் தேதி குருவாரமும் சித்திரை நட்சத்திரமும் கூடின சுபதினத்தில் சிவபூசை விதி முற்றும் அருணாசலங் கையெழுத்து

குறிப்பு :

பிழைகள் மலிவு. இதில், சூரியபூசை, சிவபூசை முதலியன சொல்லப்பட்டுள்ளன ஆன்மாவுக்கு நன்றி கூறுமுகத்தான் முறைப்படி சிவதீக்கை பெற்று செய்யப் பெறுவது சிவபூசை. அதன் முறை கூறப்பட்டுளது,

இது. எமது சுவடி எண் 386/D-756, எண் 719D,-773 போன்றது.



வரிசை எண் : 4481 சுவடி எண் : 1948-i

# திருப்பல்லாண்டு

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 15 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : சேந்தனார் பொருள் : சைவத் திருமுறை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி: ஓம்

மன்னுக தில்லை வளர்க நம்பத்தர்கள்
வஞ்சகர் போயகல
பொன்னின் செய் மண்டபத் துள்ளே புகுந்து
புவனியெலாம் விளங்க.

முடிவு :

அந்தமிலா வானந்தஞ் செந் தேன்
அன்பு புகுந்தாண்டு கொண்டாயிர் மேற்
பந்தம் பிரியப் பரிந்தவனே யென்று
பல்லாண்டு கூறுதுமே ! — 13

திருச்சிற்றம்பலம்

திருப்பல்லாண்டு முற்றும்.

சுபமஸ்து

சென்றோடும் தாம்பிர வருணி......... நெஞ்சை விடமே!

குறிப்பு :

இது, 9-ந் திருமுறையைச் சாரும். தில்லையில் விழாக் கொடியேறத் தடைப் பட்டபோது, இதனைப் பாடக் கொடி ஏறியது. அச்சாகியுளது, பிழைகள் அதிகம்.



வரிசை எண் : 4482 சுவடி எண் : 1948-j

# முழுநீறு பூசிய முனிவர் புராணம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 60 அளவு : 15×3 செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : சேக்கிழார் பொருள்: திருமுறை

நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஆதார மாமனைத்து மாக்கி நின்ற
வங்கனெம் பெருமானீ ரசைந்த வெண்ணிக்
காதார் வெண்டிருக் குழையான்
அருளிச் செய்தார்ப்ப மனுகற்ப

முடிவு :

புலியதளி னுடையானைப்
போற்றி நீற்றை
யாதிவரு மும்மலமு மறுத்தவர்
கயமையறு முனிவர் முழுவது
மெய்யணிவ ரன்றே! —6

முழுநீறு பூசிய முனிவர் புராணம் முற்றும்.
சிவாழும் பல சரிவேகனே......அளிக்குங்க மாங்கொலோ!
சிவகாமியம்மன் துணை

குறிப்பு :

12-ஆம் திருமுறையாகிய பெரிய புராணத்தில் கொகையடியார் ஒன்பதின்மருள் ஒருவர் புராணம். பிழைகள் மலிவு.



வரிசை எண் : 4483

சுவடி எண்: 1948-k

# சுப்பிரமணியர் வேல் வகுப்பு

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 60 அளவு : 15×3 செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அருணகிரியார் பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம்:

பருத்த முலை சிறுத்தயுடை வெளுத்த நகை
கறுத்த குழல் சிவந்த யிதழ் மறச் சிறுமி விழி

முடிவு :

திருத்தணியி லுதித்தருளு மோகத்தன் மலை
விருத்த னெனது ளத்திலுறை கருத்தன் மயில்
நடத்து குகன்(கை) வேலே !

வேல் வகுப்பு முற்றும்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 823-d/D–1314 போன்றது. அச்சாகியுளது. பிழைகள் அதிகம்.

இதன் பின்னர், சுளுக்குக்கு மந்திரம் உளது.



வரிசை எண் : 4484

சுவடி எண் : 1948-l

# மூவர் தேவாரம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 300 அளவு : 15×3செ.மீ.
பக்கத்திற்கு: 11 வரிகள் ஆசிரியர்: ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் பொருள் திருமுறை நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி: ஓம் நன்றாக,

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திரு ஆலவாயான் திருநீறே ! — 1

முடிவு :

கோணிய பிறை சூடியைக் கரையூரில் பாண்டிக் கொடுமுடி
பேணிய பெருமானைப் பிஞ்ஞகப் பித்தனை பிறப்பில் லியைப்
பாணுலா வரி வண்டரைக் கொன்றைத் தாரனைப் படப் பாம்பரை
நாளைனைத் தொண்டன் ஊரன் சொல்லிவை சொல்லு
வார்க்கில்லை துன்பமே !

திருச்சிற்றம்பலம்
அருணாசலங் கையெழுத்து
சுபமஸ்து

குறிப்பு:

இதில் ஞானசம்பந்தரின் திருநீற்றுப் பதிகம், பஞ்சாக்கரப் பதிகம், நமச்சிவாயப் பதிகம், திருநாவுக்கரசரின் நமச்சிவாயப் பதிகம், சுந்தரரின் திருப்பாண்டிக் கொடுமுடி, நமச்சிவாயப் பதிகம் ஆகியவை உள்ளன.



வரிசை எண் : 4485 சுவடி எண் : 1948-ற

## ஞான ஸ்தோத்திரம் (அகஸ்த்யாஷ்டகம்)

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 15×3 செ.மீ

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து ; கிரந்தம்,

தொடக்கம் :

குஷாவ சர்தஷ்டதி கந்தார்ளம்
தேசாந்தப் ராந்த மியாந்த புத்திம்

முடிவு :

இத் யகஸ்த் யாஷ்டக மிதப் புண்யம்
யத் படேத் சிவசந்நி தௌ சிவலோக மவாப்நோதி ! — 9
சிவ சாயுச்ய மவாப்நியாத்

குறிப்பு :

இதில், தலைப்பில் ஞானஸ்தோத்திரம் என்றிருப்பினும் கடைசி சுலோகத்தில் அகஸ்த்யாஷ்டகம்' என்ற சொல் கூறப்பட்டுளது.

இதனைத் தொடர்ந்து 'நந்தி ஞான தெரிசனா' என்ற பாடல் காணப்படுகிறது.



வரிசை எண் : 4486 சுவடி எண் : 1948-n

# வாரம் பிறந்தநாள் அறியும்படி

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 60 அளவு : 15 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வந்திக்கும் கதிர்க்கும் கங்குல் மதிக்கிச்
சித்திரை செய்க்காடி பெருக்கி

முடிவு :

மைந்தனுக்கு முந்திய கசிந்திர
நூதல தந்தாம ......... சங்கா
யார மதத்தை வந்தனை செய் மனமே !
குருவே துணை

குறிப்பு :

இதில், பிழைகள் மலிந்து காணப்படுகின்றன. சொற்கள் தெளிவில்லை.
இதன் பின்னர் 3 ஏடுகள், முன் நூல்களுக்கு வரி அட்டவணைகள் உள்ளன.



வரிசை எண் : 4487 சுவடி எண் : 1948-o

# சுப்பிரமணியர் வாள் வகுப்பு

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 15×3 செ.மீ

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூவு ளோனுக்குமுயர் தேவா கோனுக்கு
மெழில் பூவில் யாருக்கும் வருதுன்பு
தீர்த்திடுமே பூத சேனைக்கு மொரு

முடிவு :

வெண்றதோ டுணைவோன் வேடர் மானுக்
கழகு தேவ யானைக்கு ............ தனைத் தொழுது யர்ந்த
வாழ்க்கையினான் மேன்மையாய் .........ட்டாத வீரா
சேவிக்க வருவீரவாகுத் தலைவனறிவனறி வாட்படையே
வருகு வேளை.

வாள் வகுப்பு முற்றும்
சுபமஸ்து

குறிப்பு:

எழுத்துக்கள் சரியில்லை, பிழைகள் மலிந்துள்ளன. அச்சாகியுளது. அடுத்த ஏட்டில் முடிகிறது.



வரிசை எண் : 4488 சுவடி எண் : 1948-p

# சுப்பிரமணியர் மயில் வகுப்பு

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 15×3 செ.மீ.

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதவனு மம்புவி யுயர்சுற விழுங்கி யுமிழால்
மருவும் பணியாண்டும் மாதே
ஆறுமுக னைந்துமுக நானைமுக னெங் கடவுள்.

முடிவு :

காமேவு குமரன் சரண கோகனக வின்பொடு
வண(ங்)கு மயிலே !
சுப்பிரமணிய சுவாமி பேரில்

மயில் வகுப்பு முற்றும்

குறிப்பு :

பிழைகள் அதிகம். அச்சாகியுளது.



வரிசை எண் : 4489 சுவடி எண் : 1948-பு

# தோத்திரப் பாடல்கள்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 60 அளவு : 15 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

விக்கினேசுரர் பேரில்

நதிமதி போதசடை பரமரு முமையும்
விதியொடு அரியெனு முகமொடு கூடின
மதியொடு அரியெனு மிருகோடுறு மம்ப முகமாய்
பதிதனில் வரு கணபதி பதம் நினைவாம். —1

முடிவு :

துதிகை பதிநாலாம் வரு மேறடியே
பதினஞ்சாம் மாலைப் பொழுதும் தலைகீழே
பொருவேல் சரி வேகனே !

குறிப்பு :

இதில், கணபதி துதியும், சுப்பிரமணியர் துதியும் உள்ளன. மிக அதிகமான பிழைகள் உள்ளன.



வரிசை எண் : 4490 சுவடி எண் : 1948-ர

# உண்மைக் கட்டளை தச காரியம்

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 200 அளவு : 15×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : மனவாசகங்கடந்தார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: பழுது முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

ஞானேந்திரியங்களாவன.

சோத்திரம் தொக்கு, சட்சு, சிங்நுவை ஆதிகிராணம் —5

புலன்களாவன:

சத்த, பரிச, ரூப, ரச, கந்தம் —5

முடிவு :

அந்த பண்ட பதார்த்தங்களை யன்று துடங்கி
காண்பாரைப் போலப் புதுமை பண்ணிவிக்குமது
நியதியானது, இவன் கன்மம் பொசிக்கு மிடத்து
யிராசா யக்கினை போல நிச்சயம், பண்ணி...
...............

குறிப்பு :

சைவ சித்தாந்த நூல்களி லொன்று 'உண்மை விளக்கம்'. அதன் சாரம் போன்றது இது. வேறுபாடு காணப்படுகிறது. தலைப்பு தசகாரியம் இல்லை.



வரிசை எண் : 4491 சுவடி எண் : 1949-a

# கயறுபோட்டுப் பார்க்கும் சுவடி

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை: 100 அளவு: 12½ × 3செ.மீ.
பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

விநாயகர் துணை

சுப்பிரமணியர் தேவேந்திரன் முதலாய
தேவர்களை யெல்லாம் பயப்படாம
லிருங்கோ ளென்று கை குடுத்து
ஆதரித்த விடம் அதிக உத்தமம்

முடிவு :

சுப்பிர மணியருக்கும் வள்ளி
யம்மைக்கும் திருக்கல்லி யாணமாய்
செந்திலில் வந்து சந்தோஷமாய்
யிருந்த விடம் அதிக உத்தமம்

முற்றும்

குறிப்பு :

இதில், முதல் நாலு ஏடுகள் இல்லாததால் தலைப்பு தெரியவில்லை. இது சகாதேவ நூல் போன்றது. ஒருபக்கத்தில் பின்பாதி மட்டுமே எழுதப்பட்டுளது.



வரிசை எண் : 4492 சுவடி எண் : 1949-b

# பல்கலச மாலை

ஏடுகள் : 37 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 13½ × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : தனிப்பாடல்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம:

தார்கொன்றைத் தாவென்றேன்
    தாவெளி லொன்றென் றூரூர்க் கஞ்சி
நாமூன்றி லொன்றன்றே யார்க்கும்
    பொதுவென்றார்ப் பூவென்றேன்
போயினார் தோழி யிதுவோநம்
    மீசர்க் கியல்பு.

முடிவு :

கற்றார் பிரிதலுங் கல்லாதார் கூட்டமும்
    கைப் பொருள்க
ளற்றா ரிளமையும் போலே கொதிக்கு
    மருஞ் சுரமே !

குறிப்பு :

இதில், தனிப்பாடல் திரட்டுப் பாடல்கள், திருமந்திரப் பாடல்கள், பட்டினத்தார் பாடல் முதலான பல பாடல்கள் உள்ளன.



வரிசை எண் : 4493 சுவடி எண் : 1949-c

# சோதிட நூல்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 250 அளவு : $13\frac{1}{2} \times 3$ செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

(சக்க்ரம் உள்ளது)

முத நாடி அமுதம் 2-ஆம் நாடி சிவம்
3-ஆம் நாடி திரசம் 4-ஆம் நாடி சவுமியம்
5-ஆம் நாடி அக்கினி 6-ஆம் நாடி வளம்
7-ஆம் நாடி வாயு.

முடிவு :

சிவரை பினாக்கள் நாவேறு எல்லாம்
எரிஎரி ஏரிஞ்சு கரிகரி கரிந்து
பொரி பொரி பொரிஞ்சு போந்
தெளி போந் திரங்கி பூமியில் குதித்துப்
போகச் சிவா. (பின் ஒரு சக்கரம் உளது)

குறிப்பு :

இது, சோதிடம் பலவகை கூறுவது, பிறந்த இறந்த தீட்டுகள் எத்தனை நாட்கள் என்றும் கூறப்பட்டுளது. பிறவும் உள்ளன.



வரிசை எண் : 4494 சுவடி எண் : 1949-d

## சிந்தாமணி

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை: 50 அளவு: 12 × 7½ செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நீதிநூல்
நிலைமை : பழுது முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

நோக்கினா லெரியுந் தீப
  மொன்றதி னூற தாகுந்
தீக்குநல் சேத முண்டோ
  திரியெண்ணெ யுள்ள மட்டுந்
தாக்குஎள தகுதியாந் தாதன்
  முறைசெல்லுங் காலம் வரும்
வாக்கினால் சகாயஞ் செய்தால்
  குறையுமோ வாழ்வு தானே! —1

முடிவு:

தெள்ளற வித்தை கற்றால்
  சீஷனுங் குருவைப் பேணான்
உள்ளநோய் பிணிகள் தீர்ந்தா
  ரலகிற்பண் டிதரைத் தோடார். —23

குறிப்பு :

இதில், நல்ல பல செய்திகள் அறியக் கிடக்கின்றன.



வரிசை எண் : 4495 சுவடி எண் : 1949-e

# நந்திக் கலம்பகம்

ஏடுகள் : 7 கி எண்ணிக்கை : 150 அளவு ; 12½ × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கலம்பகம்
நிலைமை: பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆசைக்கோ சற்று மளவில்லை ஆழ்கடலி
லோசைக்கோ சற்று மொழிவில்லை—தேசக்கோன்
நந்திக்கோ சேர்வை நமக்கிங் கொருவரில்லை
அந்திக்கோ சாரி லறண் —1

முடிவு :

தீட்டுபுகழ் நந்திபாணா மெந்தையர் கோன்
வீட்டுந்தி பாடி விடிவளவுங்—காட்டிலிருப்
பேயென் றான் தோளி பிறர்நரியென் றாளன்னை
நாயென்றாள் நீயென்றே நான்.

குறிப்பு :

இது, தனிப்பாடல் திரட்டு போலுள்ளது. கலம்பக உறுப்புகள் இதிலில்லை. வெண்பாக்களே உள்ளன.



வரிசை எண் : 4496 சுவடி எண் : 1949-f

# சோதிடநூல்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 12 × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தைஅம்மா வாசிதன்னைச் சாற்றினோம் தரணியோர்க்கு
வெய்யவ னொன்று மூன்றாம் விதியரை நாலாஞ் செவ்வாய்

பையயவே புதனாம் புந்தி பாப்பான்கால் வெள்ளி முக்கால்
அய்யரே சனிவுன் றெட்டாம் அகவிலை யறிந்து கொள்ளே !

முடிவு :

பங்குனி, ஆனி, புரட்டாதி, ரோகணி
பொங்காவந் தீண்டிலும் புகர்படினும்—மங்கா கேள்.
பள்ளம் பயிரிடவும் வேண்டாப் பார்மீதில்
வெள்ள மிகுத்தே விடும்.

குறிப்பு :

இதில், மூன்றே பாடல்கள் உள்ளன. சிறப்பாக உள்ளன. இதன் பின்னர் 2 உதிரி ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4497 சுவடி எண் : 1949-g

# குறிச்சிகள் — 32

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 13 × 2½ செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: தனிப்பாடல்
நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

குறிச்சி
குப்பைக் குறிச்சி
மதவ குறிச்சி
நடுவுக் குறிச்சி
சிங்கந்தங் குறிச்சி

முடிவு :

மாயமான் குறிச்சி
புலியக் குறிச்சி
சுண்டங் குறிச்சி
கீழ்நாட்டுக் குறிச்சி
துவரைங் குறிச்சி

ஆக குறிச்சி —32

குறிப்பு :

ஊர்ப் பெயர் குறிச்சி என்பது. இதன் பின்னர் ஒரு உதிரி ஏடு உளது.



வரிசை எண் : 4498 சுவடி எண் : 1949-h

# கெவுளி காதல்

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 200 அளவு : 14×2½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சோதிடம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக
ராத்திரி பகலைக்கும் ஞாயிற்றுக்கிழமை
பல்லி விபரம் : சாதி நிறம் வெள்ளை
முதுகிலே வெகு வற்ணமாயிருக்கும்
அதின் பலன் : கிழக்கே சொன்னால்
ராகு யிருப்பான் பயமுண்டு.

முடிவு :

ஆகாசத்திலே நாயறு யிருப்பான்
கலகமுண்டு. பூமியில் சந்திரன்
யிருப்பான். நல்ல பாக்கியம் வரும்
சனிக்கிழமை பலன் மூற்றும்.
ஆனந்த வல்லியம்மாள்.
பாதார விந்தமே கெதி.
கெவுளி காதல் முற்றும்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 741-a/D-1446 போன்றது. சிறு சிறு மாறுபாடுகள் உள்ளன.



வரிசை எண் : 4499 சுவடி எண் : 1949-i

# கெவுளி காதல்

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 250 அளவு : 11 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

செவ்வாய்க்கிழமை

செவ்வாய்க் களமைப் பல்லியின் குலம்
அசுரர் குலம் அதினிறம் பொன்னிறம்
வால் கூளை. தெற்குமுகமாயிருந்து சொல்லும்

முடிவு :

மன்றா டொடுவர் சாந் தெற்கு
அறிந்தவராயிபேர் பொன்றும்
சென்றால் மேற்கு சிறப்பு வரும்
சிறந்த மங்கை வரவு சொல்லும்
நன்றாய்க் கருதி வரும். வடக்கு காதல்
மறையோன் சாவோமே. மூணாவது

குறிப்பு :

இது, முன்பிரதி போன்றது. முதல் 2 ஏடுகள் இல்லை. முடிவும் இல்லை.



வரிசை எண் : 4500 சுவடி எண் : 1949-j

# சைவ சமய நெறி

ஏடுகள்: 18 கி. எண்ணிக்கை : 400 அளவு : $10\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : மறைஞானசம்பந்தர் பொருள் : சைவத்
தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

நல்லார் தொழும் வெண்ணெய் நல்லூர்ச் சிவாலையத்துள்
பொல்லார் தாள் யான் சூடும் போது.

முடிவு :

உரைத்தாம் புதல்வ ரொரு மூவரைவு
முரைப்பா மனிப்பொதுவு மோர். —3.8

சீஷ லட்சண முற்றும்
ஆக நடுச் சூத்திரம். 155
சிவமயம் சுபமஸ்து

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 371/D-747 போன்றது. அதில் 749 செய்யுட்கள் காணப்படுகின்றன.



வரிசை எண் : 4501 சுவடி எண் : 1950–a

# இலக்கண விளக்கம்

ஏடுகள் : 203 கி. எண்ணிக்கை: 15000 அளவு: 46×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : வைத்தியநாத தேசிகர் பொருள் : இலக்கணம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

நன்றாக சுபமஸ்து

திருவிளங்கிய மாநகரத்திற்
குருவிளங்கிய மாடங்கள் போலவுங்
கற்று வல்ல கணவர்க்குக்
கற்புடை மனையாள் போலவுங்

முடிவு :

செய்யுட்க ளாண் டெச்சமென்னு முறுப்பு
நிகழவந்த செய்யுளா மென்ற துணை யல்ல—
தாண் டெச்சங்களுக்கு வேறிலக்கணங்
கூறாமையி னிவை யவற்றினின்றும்
வேறன்மையான் ................

குறிப்பு :

இதில், ஏடுகள் ஒடிந்தும் முறிந்தும் உள்ளன. நான்காவது உரிச் சொல்லியல் வரை உள்ளன. அச்சாகியுள்து. இதன் பின்னர் நான்காவது செய்யுளியலுதாரணப்

பட்டியல் 3 ஏடுகள் உள்ளன. இதன் பின்னர் "பொருத்தப் பாட்டியல்" உதிரி ஏடுகளாக, ஒடிந்த ஏடுகளாக பாதியாக 10 ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4502 சுவடி எண் : 1950-b

## பிங்கலந்தை (பிங்கல நிகண்டு)

ஏடுகள் : 33 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 46×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : பிங்கல முனிவர் பொருள் : நிகண்டு

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சிவமயம்:

(இருங்கட)லுடுத்தவிம் மானிலம் வணங்க.

× × × × ×

செங்கதிர் வரத்தால் திவாகரண பயந்த
பிங்கல முனிவன் தன்பெயர் நிறீஇ
யுரிச்சொல் பகுதி யுரைக்குங் காலை

முடிவு :

கந்தை விரியல் கத்திக மிடைய
லென்பதுங் துகிலுக் கெய்தும் பெயரே.
பாளிதம் நேத்திர மம்பரங் கோசிகம்
கலை கூறை யாகும். கந்தை.........

குறிப்பு :

இதில், ஆடை வகை வரையில் உள்ளது.

இது எமது சுவடி எண் 519/D-20 போன்றது.

இதன் பின்னர் உதிரி ஏடுகள் சிதைந்தவைகளாகப் 10 ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4503 சுவடி எண் : 1951-a

# ஒருபொருட் குவமை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 100 அளவு : 35×4 செ.மீ.
பக்கத்திற்கு: 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: இலக்கணம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுள்து எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஹரி: ஓம் நன்றாக

மதிமுகக் கமலம் போன்ற
மனதில் திறைய மாகப்
பதிமுகத் திரள்க ளார்கும்
பன்மணிச் சியலி ஞாடே

முடிவு :

கூரிருள் அகற்றி ஞானக்
கொழுஞ்சுடர் ஊனிலப் பற்றத்
தூ............திகழ்ந்தது மாசான்
துணைமலர்ப் பதத்தில் சேர்வாம் —11

ஒருபொருள்க் குவமை முற்றும்.

குறிப்பு :

இது, ஒரு பொருளுக்குக் கூறும் பல்வேறு உவமைகளைக் கூறுவது.



வரிசை எண் : 4504 சுவடி எண் : 1951-b

# ஞானசாரம்

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 35×4 செ.மீ.
பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ
சாத்திரம் நிலைமை : நல்ல திலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

ஹரி : ஓம் நன்றாக

ஒருமை வெண்கோட்டுக் கன்றா
யோரிரு கன்னக் குன்றைச்
சொரியுமும் மதத்து நால்வாய்
யைங்கரத் தும்பி தன்னை,

முடிவு :

வடிவெடுத் தென்போல் வந்த
வளர்பெருங் கருணை போற்றி
படிமிசைப் பயின்ற வுண்மைப்
பதாம்புயம் போற்றி போற்றி ! — 118

ஞான சாரம் முற்றும்

குறிப்பு :

இது, ஞானம் பெறும் வழிமுறை கூறுவது.

''சீரருள் பெருகு முண்மைத் திருத்தொண்டத் தொகையி லுள்ளோ ரருட்பாதம் போற்றி யவரிருத் தொண்டுதன்னை'' என்று கூறப்பட்டுளது நோக்கத்தக்கது.



வரிசை எண் : 4505 சுவடி எண் : 1951-c

## சங்கராச்சாரியார் வாக்கியம்

ஏடுகள் : 51 வரி. எண்ணிக்கை : 5000 அளவு : 35×4 செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : சங்கராசாரியர் பொருள்: சோதிடம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

இறையவன் லெக்கனத்தி லிருந்திட
அவர்க்கு நூலில் மறையவர் மொழி
தப்பாத மதிமக னிருக்க ரெண்டில்
விறைவுடன் பிருகு சேயும் விளங்கிட

முடிவு :

நானய முகமாய்த் தொகுத்த
    வாகனங்கள் நல்கிடுங் குருவுடன் சேயுங் காயும்
வெண்மதியும் நின்றிடில் வேதக் கயறுறு
    வயமும் வந்திடுமே ! — 521

குறிப்பு :

இது, சோதிட விளக்கம் கூறுவது.

இதன் பின்னர் 2 உதிரி ஏடுகள் உள்ளன.



வரிசை எண் 4506 சுவடி எண் : 1951-d

# இரண்டாம் பாவக பலன்

ஏடுகள் : 48 கி. எண்ணிக்கை: 4000 அளவு: 35 × 4 செ.மீ

பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சுகம்பெரு மாண்டை நோக்கிச்
    சொல்வது குடும்பம் பொண்ணை
முகக்களை கண்ணை வாக்கை
    மொழிந்திடும் வித்தை தன்னை

முடிவு :

போனமே ஷாங்கி ஷத்தில்
    பொருந்திடப் பிறந்த மய்ந்தன்
றேன்னாய்ப் பாம்பால்ச் சீவன
    சிறந்தமோ சங்க ளாமே ! —16

பன்னிரண்டாம் பாவகப் பலன்
முற்றிற்று.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 781/D-1432 போன்றது. ஆயினும் வேறுபாடு காணப்படுகிறது. முதல் பாவகப் பலன் இல்லை. 12-ஆம் பாவகப் பலன் முடிய உளது.

+ +×+ +

வரிசை எண் : 4507

சுவடி எண் : 1951-e

# வாலாரிட்ட சாத்திரம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 400 அளவு : 35×4 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : வேதலிங்க பட்டர் பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூமியிற் செனன மான
 பிள்ளையாண் டிறா றுக்கு
மாமென நிலைத்துச் சொல்ல
 அரிதாய அயனா லாகும்
தீமையாய்ப் பிரமா தாக்கள்
 செய்திடுந் தோசத் தாலும்

முடிவு :

ஆவலுடன் வாலாரிஷ்ட்ட முதலாயுள்ள
 அத்தனையு மடவுடனே வுரையாய்ச் சொன்னார்
தேவனெனும் வேதலிங்கப் பட்டர் நன்றாய்த்
 திருவுளத்தால்ச் செகமதிலே திருந்த வாழி ! —37

வாலாரிஷ்டம் முற்றிற்று

குறிப்பு :

இது, குழந்தைகள் பற்றிய சோதிடம் கூறுவது. சிறந்த நூலாகத் தெரிகிறது.



வரிசை எண் : 4508

சுவடி எண் : 1952-அ

# சிவஞான சித்தியார் பரபக்கம்

ஏடுகள் : 55(21-75) கி. எண்ணிக்கை: 2500 அளவு : 33×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அருணந்தி சிவாச்சாரியார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

(21-ஆம் பக்கத் தொடக்கம்)

... ... ... ரெழுபத்தாக் சூரணைகள ...........
வெண்ணை மெய்கண்டான் சைவத்தாலாய்ந்த தமிழ்.
திருஞான சம்பந்தன் றுணை.

(21-ஆம் ஏட்டின் பின்புறம்)

ஒருகோட்ட னிருசெவிய மும்மதத்த னால்வாய னைங்கரத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான் றருமொருவாரணத்தின் றாள்க

முடிவு :

இப்படிப் பிறாகுசாபத தீரைந்து பிறப்பில் விழ்ந்து
மெய்ப்படு துயரமுற்று வருபவன் விமல
னெப்படி யாலுஞ் சொன்னே னிறையரி யல்லனென்று
மைப்படு கண்ட னண்டன் மலரடி வணங்கிடாயே ! — 31

ஆக 300 பரபட்ச முடிந்தது. சிவன்றுணை முருகன் றுணை.

குருப்யோ நம: சுபமஸ்து

குறிப்பு :

இது ,எமது சுவடி எண் 54-b/D-689 போன்றது. முன்னர் 20 ஏடுகளில் உள்ள நூல் இல்லை.



வரிசை எண் : 4509 சுவடி எண் : 1952-b

# சிவஞான சித்தியார் சுபக்கம் - உரையுடன்

ஏடுகள் : 170 கி. எண்ணிக்கை : 10000 அளவு : 33×3 செ.மீ
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அருணந்தி சிவாச்சாரியர் பொருள் : சைவசித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஒருகோட்ட னிருசெவியன் மும்மதத்த னால்வா
யைங்கரத்த னாறு

தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையா
றருமொரு வாரணத்தின் றாள்க
× + × × × × செய்யுந்தேவே.

ஒருகோட்டன் எ.து. ஒரு கொம்பையு முடைத்தாய்
இருசெவியன் எ.து. இரண்டு செவிகளையு முடைத்தாய்.

முடிவு :

பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே எ.து. பரிசித்துந் திருவுளம் பற்றியுந் திருக்கண் சாத்தியுஞ் சிவமே யாக்கு மென்றவாறு. — 315

சிவஞான சித்தியுரை காண்டிகை சிவபட்ச முற்றும்
பரமானந்த தய்யா பாதமே சரணம்.

காலம் :

..................... வருஷம் ஆனிமாதம் 29-ந் தேதி பூருவபட்சத்து துவாதெசியும் அனுஷமும் ... ... ... பக்ஷத்துரைக் காண்டிகை எழுதி நிறைவேறிற்று. இந்த உரை எழுதினவர் வடமண்டலம் பொருள் விலைச்(சேரியில்) எழுந்தருளி யிருக்கும் பரமானந் தய்யா சீஷன் வேளா குறிச்சியில் வினை தீர்த்தான் எழுத்து.

செப்பறை மடத்துக்கு

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 544/D–736 போன்றது. அதற்கும் இதற்கும் வேறு பாடு காணப்படுகிறது.



வரிசை எண் : 450 சுவடி எண் : 1953-a

# சூடாமணி நிகண்டு
# 11 - ஆவது தொகுதி - உரையுடன்

ஏடுகள் : 97 கி. எண்ணிக்கை : 4000 அளவு : 31×3 செ.மீ

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர்: வீரை மண்டல புருடன் பொருள் : நிகண்டு

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து தமிழ்.

தொடக்கம் :

பகவனே யீசன் மாயோன் புங்கவன் சினனே புத்தன்
பகவனென்பது யீசனென்றது சிவன். மாயோ னென்றது
விஷ்ட்டுணு பங்கைய னென்றது பிரமா சின னென்றது
கோபி புத்தனென்பது சமணாளுக்கும் பெயர்,

பகலே நாளொரு முகிள்த்தம் பகலவ னடுவே தேசி
பகலென்பது ஒருநாள் முகுள்த்தம் பகலவ னென்றது ஆதித்தன்

முடிவு :

கரியென்பதிருந்தை சான்று கறையடியுடன் முப்பேரே.
கரியென்பது கரிக்கும் சாட்சிக்கும் யானைக்கும் பேர் — 29.

குறிப்பு :

இது சூடாமணி நிகண்டின் 11-ஆவது தொகுதி. தமிழ் கற்போர் இதனை முதலில் மனனம் செய்வது வழக்கம்.

இது. எமது சுவடி எண் 938-D-1096 போன்றது.



வரிசை எண் : 4511 சுவடி எண் : 1953-b

## சச்சிதானந்த மாலை

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 300 அளவு : 31×3 செ.மீ

பக்கத்திற்கு: 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

ஹரி : ஓம் நன்றாக

முச்சுட ராகியொன்றாய் முடிந்ததோர் சோதிபாதம்
× × × × × சேர்வாம்.

நூல்
கண்ணுக்குள் மணியாய் நின்ற
காரணக் குருவைப் போற்றி

முடிவு :

சச்சிதா னந்த மென்னும் தன்மையை மகிழ்ந்து கேட்போர்
உச்சிமேற் பார்வையாகி யுள்வெளி திறந்து முப்பாழ்
வச்சிர வெளியுந்தாண்டி மகிழ்ந்தொரு வாசல் கண்டு
நிச்சய நிஷ்க ளத்தே நிராமயச் சோதி சேர்வார்.

சச்சிதானந்த மாலை முற்றிற்று. காந்திமதியம்மாள் சகாயம்

வடிவே துணை, ஸ்ரீராமச் செயம்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 894/D-1147 போன்றது. இதில், ஒரு பாடல் மிகை யாகக் கடைசியில் உள்ளது.



வரிசை எண் : 4512 சுவடி எண் : 1953-c

# கந்தரனுபூதி-உரையுடன்

ஏடுகள் : 15 கி. எண்ணிக்கை : 500 அளவு : 31×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கடவுள் துணை. விநாயகர் காப்பு
கலிவிருத்தம்

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள் சண்முக னுக்கியல்சேர்

செஞ்சொற் புனைமாலை சிறந்திடவே
பஞ்சக்கர வானை பாதம் பணிவாம்,
இதன் பொருள்: மனமாகிய கனத்த கல்லானது
நெகிழ்ந்து உருக எளிதில் அருள் செய்யும்

முடிவு :

தன்னந் தனிநின்றது தாமறிய
× × × × + ×
கின்னங்களையும் கிருபைசூழ் சூடரே! — 49.
மனிகிகட்டற .............. சேவகனே —50.
உருவா யருவா யுளதா யிலதா
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே ! —51.
கந்தரனுபூதி மூலமும் உரையும் முற்றும்.

விளம்பரம் : இதனால் யாவருக்கும் அறிவிப்பது யாதெனில், கும்பகோணத்தில் சக்கரபாணி சுவாமி சந்நதி வீதியில் பெரியண்ணம் பிள்ளை வீட்டில் தமிழ் தெலுங்கு இங்கிலீசு, கிரந்தம் பலவகை புத்தகங்கள் வேண்டியவர்கள் விலை வாங்கிக் கொள்ளப்படும்.

குறிப்பு :

கடைசியில் சில பாடல்களுக்கு உரை இல்லை.
அச்சாகியுளது. விளம்பாம் தொடர் குழப்பமாயுளது.



வரிசை எண் : 4513 சுவடி எண் : 1953-d

# ஆத்தி சூடி மூலமும் உரையும்

ஏடுகள் : 15 கி. எண்ணிக்கை : 500 அளவு : 31 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : ஔவையார் பொருள் : நீதிநூல்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

காப்பு

ஆத்தி சூடி அமர்ந்த தேவனை
ஏத்தி யேத்தித் தொழுவோ மியாம்,

நூல்.

அறஞ்செய விரும்பு. அறம் தருமத்தை செய செய்தற்கு
விரும்பு ஆசை கொள்ளு, தருமத்தைச் செய்தற்கு நீ
ஆசை கொள்ளு —1.

முடிவு :

ஓரஞ் சொல்லேல். ஓரம் பக்ஷபாதம் சொல்லேல்
சொல்லாதே. பட்சபாதத்தை நீ யாதொரு வழக்கிலும்
சொல்லாதே. — 107
ஔவையார் அருளிச்செய்த "நீதிச்சொல்" முற்றும்

குறிப்பு :

இதற்கு நீதிச் சொல் என்று மற்றொரு பெயரும் உண்டு பெரும்பாலும் மூலம் மட்டுமே இருக்கும். இதில் எளிய உரை உளது.



வரிசை எண் : 4514 சுவடி எண் : 1953-e

# கொன்றை வேந்தன்

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 400 அளவு : 31×3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : ஔவையார் பொருள் : நீதிநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

நன்றாக.
ஆத்தி சூடியமர்ந்த தேவனை யேத்தியேத்தித் தொழுவோ மியாமே.
நூல்
அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம். தாயும் தகப்பனும்
முன் காணப்பட்ட தெய்வங்களாவார்.

முடிவு :

ஓதாதார்க் கில்லை உணர்வொடு மொழுக்கம்
நல்ல நூலைப் படியாதார்க்கு அறிவுடனே நல்ல
நடக்கையும் உண்டாகுதல் இல்லை. முற்றும்.

குறிப்பு:

இதில், தலைப்பு ஆத்திசூடி என்றே உளது. அதன் காப்புச் செய்யுளே உளது. அச்சாகியுளது.



வரிசை எண் : 4515 சுவடி எண் : 1953-f

# வெற்றி வேற்கை

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 31×3 செ.மீ

பக்கத்திற்கு 7 வரிகள் ஆசிரியர் : அதிவீரராமபாண்டியன் பொருள்

நீதிநூல் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவே துணை.
வெற்றி வேற்கை வீரராமன
கொற்கை யாளி குலசேகரன் புகன்ற
தமிழ்தெரிந்த நறுந்தொகை தன்னாற்
குற்றங்களைவோர் குறைவிலா தவரே!
நூல்
எழுத்தறி வித்தவன் இறைவனாகும்.
எழுத்து முதல் ஐந்து இலக்கணங்களையும் நன்றாகத்
தெரிவித்தவன் கடவுளாவான். —1.

முடிவு :

பெண்டிர் கழகெதிர் பேசா திருத்தல்.
பெண்டுகளுக் கழகாவது தங்கணவரோடு எதிர்த்துப்
பேசா திருத்தலாம். --11.

குறிப்பு :

இது, அச்சாகியுளது.



வரிசை எண் : 4716 சுவடி எண் : 1953-g

# மூதுரை

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 400 அளவு : 31×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : ஔவையார் பொருள் : நீதிநூல்
நிலைமை : பழுது முழுமை : முற்றாற்றது எழுத்து ; தமிழ்.

தொடக்கம் :

வாக்குண்டாம் நல்ல மனமுண்டா மாமலர
ணோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் துப்பிக்கையான் பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு.

இதன் பொருள் : பவளம் போலச் சிவப்பாகிய திருமேனியையும், துதிக்கையையும் உடைய விநாயகனுடைய திருவடிகளைப் பூவைக் கைக்கொண்டு தப்பாமற் சேர்ந்து பூசை செய்வோர்க்கு

நூல்

நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
× × × × ×
தலையாலே தான்தருத லால். இ.ள்

முடிவு :

அதுபோலக் கற்றறியாத மூடர் மூடரையே கொண்டாடுவர் —24
நஞ்சுடமை தானறிந்து நாகங்கா.........
.........புறங்கிடக்கு நீர்ப்பாம்பு—நெஞ்சிற்
கரவுடையா............

முடிவு :

இதில், 24 செய்யுட்களே உரையுடன் உள்ளன. காப்புச் செய்யுள் வேறு பட்டுளது. இது, எமது சுவடி எண் 813-c/D-1137 போன்றது.



வரிசை எண் : 4517 சுவடி எண்: 1954-a

# இலக்கணக் கொத்து

ஏடுகள் : 125 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 26½×3 செ.மீ.

பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : சுவாமிநாத தேசிகர் பொருள் : இலக்கணம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம்:

சுவாமிநாத தேசிகர் சரித்திரச் சுருக்கம்

இந்நூலாசிரியராகிய சுவாமிநாத தேசிகர் சற்றேறக்குறைய நூற்றைம்பது வருஷத்திற்கு முன் பாண்டி வள நாட்டில் பரம்பரை சைவ வேளாளர் குலத்திற் றோன்றி

சிறப்புப் பாயிரம்

மதிவெயில் விரிக்குங் கதிரெதிர் வழங்கா
துயர்வரை புடவியி யர்வுற வடக்கி

முடிவு :

வடநூலாரும் இவ்வாறு கொள்ளுதலானும் இன்னும்
பலவாற்றானுமா மென்க. செய்யு ளென்னுஞ் சொற்குப்
பொருளோர்ந்து முணர்க. மூன்றாவது ஒழிபியல் முற்றிற்று —44

இலக்கணக் கொத்து முற்றும்.

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 971-d/D-1101 போன்றது. பிற செய்திகள் ஆண்டு காண்க. இதில் ஆசிரியர் வரலாறு காணப்படுகிறது. 2 பகுதியாக எழுதப்பட்டுளது.



வரிசை எண் : 4518 சுவடி எண் : 1954-b

# ஞானாசாரிய குரு அபிஷேக விதி

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : 26½ × 3செ.மீ

பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

ஆதியந்த முணர்ந்த மெய்ஞ்ஞானி யாதீனத்தின்
அபிடேகவிதி புவியி லனுட்டிப்போர்க் குரைப்பாஞ்
சோதி சிவாலைய மீசானியத்தில் மடாலையத்தில்
தூய நதி தீரத்தில் சோலையிடத்தாதல்

முடிவு :

நிதித்தரு நற்சொற்ண மலரற்சனைகள் செய்து
நேருட னட்டாங்க சாட்டாங்க முறப்பணிந்து
துதித்தருளால் பூதி சாதன பாக்கியம் பெற்றுச்
சுகதேவ தேவேந்திர சுபம் பொருந்துவாரே ! —11

திருச்சிற்றம்பலம்

பொன்னம்பலவன் றிருவடிகளே சரணம்.
சன்னியாச ஆச்சிரமம் ஆதீன குரு தெட்சிணாமூர்த்தி
தேசிக னபிஷேக விதிக் கவி பதினொன்றும் நீடூழி வாழ்க
அருணாசல தேசிகன் பாதார விந்தமே கெதி.

ஸ்ரீ தேவ்யை நம : சுபமஸ்து.

காலம் :

1071-ஆம் வருடம் ஆடி மாதம் 13-ந் தேதி கனகசபை எழுதிய ஏடு முற்றும்

குறிப்பு :

இது, ஆதின கர்த்தர்கட்கு 'ஆர்சார்யாபிஷேகம்' எனும் செயல்முறை செய்து வைப்பதன் விதிமுறை.



வரிசை எண் : 4519 சுவடி எண் : 1954-c

# சன்னியாச ஆதீன குரு அபிஷேக விதி அட்டவணை

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 200 அளவு : 26½×3 செ.மீ

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : நந்திதேவர் பொருள் : சைவத் தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

ஆதார சத்தி முதலாக சிவாத்து விதானந்தம்
வரைக்கும் கற்றுக் கேட்டுத் தெளிந்து
திட்டை கூடின மகாத்மாக்களான
சன்னியாச குரு

முடிவு :

ஞான பாதத்தை நாடிச் சிந்தை செய்திருக்க வென்று
நந்திகேசுரர் அருளிச் செய்த திருவாக்கியப்படி
ஒரு குருப்பிரதிட்டை செய்தால் ஆயிரத்தெட்டு
சிவப்பிரதிஷ்டை செய்த பலனடைவார்க ளென்றது.

இவ்வபிஷேகவிதி அட்டவணை செப்பறை மடாலயம்
அழகிய கூத்த குருக்களய்யரவர்கள் குமாரர்
கனக சபாபதி எழுதினது.

காலம் :

1071-ஆம் வருஷம் ஆவணி மாதம் 22-ந் தேதி சுபமஸ்து.

குறிப்பு :

இது, முன் பிரதி போன்றது. இது உரைநடையில் உள்ளது.



வரிசை எண் : 4520 சுவடி எண் : 1954-d

# சமாதி வைக்க அட்டவணை

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை: 300 அளவு : 26½×3 செ.மீ.

பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள்: சைவ சாத்திரம்

நிலைமை: நல்ல நிலை, சிறிது பழுது முழுமை: முற்றுமுள்ளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதரா சத்தி முதலாகச் சிவாத்து விதானந்தம்
வரைக்குங் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து
நிட்டை கூடின மகாரர் மாக்கள் பரிபூரண மானால்
அவர்களைச் சமாதி வைக்க வேணும்
அக்கினி மாலை சாத்த லாகாது.

முடிவு :

சமாதி பூசை அட்டவணைப்படி சிறப்பாகப் பூசைசெய்து
சிவன்கோவிலுக்கும் தெட்சணா மூர்த்திக்கும்
அபிஷேக நிவேதனம் சிறப்பாகப் பண்ணி
பிராமண போசனம் மயேசுர பூசை சிறப்பாகச்
செய்து முடிக்கவும்.

குறிப்பு :

இது, சைவத்துறவிகள், மடாதிபதிகள் முதலானவர்கள் பரிபூரணம் அடைந்த பின் சமாதி வைக்கும் முறை கூறுகிறது.



வரிசை எண் : 4521 சுவடி எண் : 1954-ஏ

# சாமதி பூசை அட்டவணை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 25 அளவு : 26½ × 3 செ.மீ
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவதோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சமாதியிடத்தே சென்று திருமஞ்சன மெடுத்து வந்து
புரோட்சித்து பாத்தியாசமனாற்கியந் தாபித்து தன்னையும்
பூசை திரவியங்களையும் பிரோட்சித்து பஞ்சசுத்தியுஞ் செய்து
சிவபூசை பண்ணுகிறாப் போலே ஆதார சத்தி முதற் பூசித்துச்
சாதசிவ மூர்த்தியைத் தியானத்து

முடிவு :

ஈசானத்துக்குத் தெற்கே பிரமாவையும்
நிருதிக்கு வடக்கே விஷ்ணுவையும் பூசித்து
பழம் சர்க்கரை சேர்த்துப் பெலியிட்டு
தூபதீபங் கொடுத்து முடிக்கவும். சமாதியைப்
பிரதட்சண நமஸ்காரம் செய்து விபூதி தரித்துக்
குடுத்து மகேசுரபூசை செய்து முடிக்கவும்
கணபதிக்கு பொறி பணியாரம்
பிரமாவுக்கு தேங்காய் பழம் சர்க்கரை
விஷ்ணுவுக்கு ————

குறிப்பு :

இது, குருபூசை செய்யும் முறையினை மிக எளிமையாகக் கூறுகிறது.



வரிசை எண் : 22 சுவடி எண் : 1954-f

## வைதீக சந்நியாசவிதி முதலியன

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 700 அளவு : 26½ × 3 செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : சைவதோத்திரம்

நிலைமை : நல்ல நிலை, சிறிது பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : கிரந்தம்

தொடக்கம் :

அத சந்யாசவிதி புரச்சரணத் வேண
க்ருச்ர சதுஷ்டயம் க்ருத்வா உத்தராயணே
சக்லை காதஸ் யாம் பூர்ண மாஸ்யாம்

முடிவு :

ஆயிரம் பொன்திதியுள்ள பிரபுக்களுக்கும்
யிந்தப்படி தானம் செய்யவேண்டுவது,
ராசாக்களுக்கு எண் மடங்கு
செய்யவேண்டுவது

இதில், ஞானதீட்சைவிதி, ஞானாசார்யாபிஷேகவிதி, எமதர்மராஜ மந்திரம், சைவசமாதி சம்புடம் ஆகிய நூல்கள் கிரந்தத்தில் உள்ளன. முன் நூல்களின் கிரந்த மொழி பெயர்ப்பாகக் காணப்படுகிறது. ஒரு ஏடு ஒடிந்து தைத்து வைக்கப் பட்டுளது.



வரிசை எண் : 4529 சுவடி எண் : 1954-இ

## சமாதி வைக்கிற குகை மாலை

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : 26½ × 3 செ.மீ

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

ஆதியந்த முணர்ந்தவனே மெய்ஞ்ஞானி மேலாம்
ஆருளுடனே யடைந்திடும் போதவனத்தின் மேனி
யோதரிய ஞான வங்கிதன்னால் வெந்தவுடலினையே
பூதவன லாலொளிக்குப் போது
வேதியன் மாலசன்

முடிவு :

மண்டல மூன்று மாதாரங்கள் பதிமூன்று
மருள் முகத்தாற் பணிந்து கேட்டு
நண்ணியது சிந்தித்துத் தெளிந்து நிட்டை
நண்ணுமவ னற்சிக்க நன்மை யெய்தும்
புண்ணியஞ்சேர் பத்தியுடன சித்தி முத்தி
பூரணமாஞ் சிவானுபவம் பொருந்துவ ரென்றுணரே ! —12.
குகை மாலை முற்றும்.
அழகிய கூத்தக் குருக்களய்யா அவர்கள் புத்திரன்
கனகசபாபதி சுகஸ்த்த லிகிதம். செப்பறை மடம்,

காலம் :

1075-ஆம் வருடம் ஆவணிமாதம் 2-ந் தேதி

குறிப்பு :

இது, முன்பு கூறப்பட்ட சமாதி வைக்கும் முறையினைப் பாடலாகக் கூறுவதும் சமாதிக் குழி நிலை கூறுகிறது.

வரிசை எண் : 4521 சுவடி எண் : 1955-a

# சிவஞானபோதம் – உரையுடன்

ஏடுகள் : 55 கி. எண்ணிக்கை : 2000 அளவு : $23\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : மெய்கண்டார் பொருள்: சைவ சித்தாந்தம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

கல்லா னிழன் மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே !

எ.து. கல்லா னிழன் என்றது கல்லாலின் கீழெழுந்தருளியிருந்து அகத்தியர், புலத்தியர், சனகர், சனற் குமாரரிவர்கள் நால்வர்க்குந் தன்மார்த்த காம மோட்சங்களை யருளி.

முடிவு :

தாரணியோர் தாமுணர பூதலத்திலுள்ள வாற்மாக்களறிய எ து. திருட்டாந்தத்தா னன்று ஏதுக்களாலுந் திருட்டாந்தத்தாலு மிப்பொழு தென்றவாறு – 9. ஆக 82

பன்னிரண்டாஞ் சூத்திர முற்றும்.
சிவஞான போத வுரை முற்றும்
வேலப்ப அய்யர் பாதமே கெதி.

குறிப்பு:

இது, சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதின்ான்கனுள் முதன்மையானது.

இது, எமது சுவடி எண் 945/D-1245 போன்றது.

இதன் முன்னர் முகவுரை முதலியன எழுதிய 5 ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4525 சுவடி எண் : 1955-b

# நிலையாமை யுரை

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 700 அளவு : 23½ × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நீதிநூல்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

நிலையாமை

யஃதாவது இனியவற்றின் பயனாகிய ஞானங்கூறிய துடங்கினார். ஞானமாவது வீடு பயக்கு முணர்வு. அதி நிலையாமை முதலவா வறுத்த லிறுதியாக நான்கதிகாரத்து ளடக்கப்பட்டது.

முடிவு :

இந்நிலைமை யுடையவனை வடநூலர் சீவன்முத்த—
னென்ப இதனால் வீடாவதிது வென்பதூவும் முத
லவா வறுத்தார்க் கப்பொழுதே யுளதா மென்ப தூங்
கூறப்பட்டது —10

அவா வறுத்தல் முற்றும்

குறிப்பு :

இதில், நிலையாமை, மெய்யுணர்தல், அவாவறுத்தல் ஆகிய அதிகாரங்கள் உரையுடனுள்ளன.



வரிசை எண் : 4526 சுவடி எண் : 1955-c

# (திரு ஏகம்ப மாலை)

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 150 அளவு : 23½ × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றாதது எழுத்து : தமிழ்.

நாடகக்கம் :

திருச்சிற்றம்பலம்

சந்திர சேகர மொன்று ரண்டுமையோர்
பாகந் தடரிடப வாஹந
முன்னொரு நாற முண்டவமா
மைந்து கலியாணம் பிச்சாடான மாறாகும்.

முடிவு :

மாங்கதன் வெம்மை யறிந்தவர்க்கு மயர
அடக்குகமு மதனுளே யடங்கரா
ஓங்கிய கோபத் தீயினை யொக்கும் உடம்பை
உலகில் வேறுண்டோ.

குறிப்பு :

இதில், வெவ்வேறு பாடல்கள் காணப்படுகின்றன. தலைப்பு இல்லை. இதில் 'கச்சி யேகம்பனே' எனும் பாடல்கள் 2 உள்ளதால் இத் தலைப்பு தரப்பட்டது.



வரிசை எண் : 4527 சுவடி எண் : 1955-d

# சிவஞானபோத உரைக் கருத்து

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 150 அளவு : 23½ × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மெய்கண்ட பண்டாரம் உரை பாயிரத்தில்
முதற் சூத்திரத்திலு மிரண்டாஞ் சூத்திரத்திலும்
கற்த்தா ஒருவ னுண்டென்கிறதுங் கிருத்திய
கற்த்தாக்களில் வைத்துக் கொண்டு

முடிவு :

மகாரம் நாக்கிலே நின்று ரசத்தை யறியும்
சிகாரம் கண்ணிலே நின்று ரூபத்தை யறியும்
வகாரம் தேகத்திலே பரிசத்தை யறியும்
யகாரஞ் செவியிலே சத்தத்தை யறியும்
என்றுங் காண்க.

குறிப்பு :

சிவஞான போத உரையினைச் சுருக்கிக் கருத்தாகக் கூறுகிறது.



வரிசை எண் : 4528 சுவடி எண் : 1955-௪

# உண்மை விளக்கம் சிந்தனை

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 800 அளவு : 23½ × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : திருவதிகை மனவாசகங் கடந்தார்

பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது

எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

வண்மைதரு மாகம நூல்

வளப்பத்தைத் தரப்படா நின்ற வாகம நூலிலே
வைத்த பொருள் வழுவா வுண்மை விளக்க
விளக்க முறை செய்யப் பரமேசுர னருளிச்
செய்து வைத்த

முடிவு :

மெய்கண்டான் பன் மறைகள் வண்மைகளு
மாகம நூல் வைத்த பொருள் வழுவாதுண்மை
விளக்கஞ் செய்தா னுற்று. ...5

உண்மை விளக்கஞ் சிந்தனை முற்றும்
வேலப்பசுவாமி திருவடிகளே சரணம்,
திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இதில், மூல நூலின் கருத்து கூறப்பட்டுள்ளது.



வரிசை எண் : 4529 சுவடி எண் : 1955-f

# திருவுந்தியார் - உரை

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை: 500 அளவு: $23\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : உய்யவந்ததேவ நாயனார் பொருள் : சைவசித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்
பரிபூரணமா யிருக்கிற சிவ னாற்மாக் களுக்குச்
சிவனுபவம் விளையும் நிமித்தமா
மானுடச் சட்டை சாத்தி யுய்யவந்த தேவ
நாயனா ரென்னுந் திருநாமத்தையுஞ் சாத்திக்கொண்டு

முடிவு :

வைய முழுது மலக்கயங் கண்டிடு
முய்ய விந்தா னுரை யுந்தீ பற
புண்மை யுணர்ந்தாரென் றுந்தீ பற! எ.து.

உய்யவந்த தேவ நாயானார் செய்த 'திருவுந்தியா' ரென்னு
நூலினுடைய வுண்மையறிந்தவர்கள் பிறவஞ்ச முழுதையு நிஞ்
ஞான சாகரமாக் காணக் கடவது என்றவாறு

திருவுந்தியா ருரை முற்றும்.

குறிப்பு :

இது, சைவ சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. இந்நூலாசிரியர், திருவியலூரில், பரிபக்குவ மடைந்திருந்த ஆளுடைய தேவ நாயனார் பொருட்டு இந்நூலை அருளினார். இது, அச்சிடப்பட்டுளது.



வரிசை எண் : 4530 சுவடி எண் : 1955-g

# வினா வெண்பா-உரை

ஏடுகள்: 6 கி. எண்ணிக்கை : 250 அளவு : $23\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

பரிபூரண கற்தாவா யிருக்கின்ற
சிறிகண்ட பரமேசுரன் யருளச்
செய்யப்பட்ட சிவாகமத்திலே
ஞான காண்டமா யிருக்கிறதை
நந்திகேசுர சுவாமிக்குக் கடாட்சித்தருள

முடிவு :

வினாவெண்பா உண்மையை வினாவியறியாத பேர்
உள்மனக் கனவிலே பாலை குடித்ததுக் கொக்கு மென்றது
ஞான மிகுதியுடையோர்க்குச் சத்திய மாகவே
தோன்று மென்று மல்லாத பேர் எத்தினை சாத்திரம்
படித்தாலும் வினாவெண்பா பாராதவனுக்கு உள்மனக்
கனவிலே பால் குடித்தது போல ஒன்றுந் தெரியா தென்றவாறு
வினாவெண்பா முற்றும். — 13

குறிப்பு :

இது, சைவசித்தாந்த சாத்திரங்களுள் ஒன்று. இதில், சிவப்பிரகாசத்தின் சாரம் விளங்கப் பதின்மூன்று வெண்பாக்களால் சுருக்கமாக சைவ சித்தாந்தம் வினவப்பட்டுளது. இந்நூலைக் கல்லாதார்க்கு சைவசித்தாந்தம் பற்றி ஒன்றும் தெரியாது என்று கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4531 சுவடி எண் : 195○-h

# கொடிக்கவி-உரை

ஏடுகள் : 10(6—15) கி எண்ணிக்கை : 200 அளவு : 23½ × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்
பொருள் : சைவசித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சார்பு நூல் பண்ணின கொற்றங்குடியார்
இதிலே கொடிப்பாட்டு நாலும் ஒரு சாத்திரம்
அந்த சாத்திர மெல்லாத்திலும் மேம்பட்ட
சங்கையைத் திருவுளம் பற்றின தென வறிக.

ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடம். எ.து.
ஆணவத்துக்கும் ஞானத்துக்கு மிடமொன்றே.

முடிவு :

இதற்கு உ ம. திருவுந்தியாரிலே நஞ்செய லற்றந்த
னாமற்றபின் னாதன்றன் செயறானே யென்றுந்தீ பற
தன்னையே தந்ததென் றுந்தீ பற. ஆகையாலிந்த
மூன்று வகையுங் கண்டு கொள்க. — 4

கொடிக்கவி யுறை முற்றும்.

குறிப்பு :

இது, சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று நான்கே கவிகளை யுடையது. தீட்சா கிரமத்தால் மலத்தைப் போக்கக் கொடி கட்டியது போல செய்யப் பட்டுளது சிதம்பரத்தில் ஒரு காலத்திலே, கோயில் விழாவின் போது கொடியேறுதல் தடைப்பட்டது. இந்த நான்கு பாடல்களையும் உமாபதிசிவம் கொடிமரம் முன்நின்று பாட கொடியேறியதாக வரலாறு.



வரிசை எண் : 4532 சுவடி எண் : 1955-i

## சிவப்பிரகாசம் - உரையுடன்

ஏடுகள் : 55 கி. எண்ணிக்கை: 1200 அளவு: 23½×3½ செ.மீ.
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்
பொருள் : சைவசித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்

தொடக்கம்

ஒளியான திருமேனி ஞானப்பிர காசமான
திருமேனியிலே நின்றும் உமிழ்தான மிகமேவு
சோதியா நின்ற மூன்று மதங்களு மிகுதியும்
பொருந்துகை யினாலே

முடிவு :

பின் மூன்றருமலை யொளியக் கொள்வோன்றன்மையிற்
முன்னொடு பின் மயக்க விகற்பந்திரக் கொள்ளு முறைமையை
யுடைய பெயர்களுக்கு சாற்றலாமே — இந்நூலை யனுக்கிரகம்
பண்ணலா மென்றவாறு.

ஆகப் பொது வுள்பட விருத்தம் நூறு முடிந்தது.

முற்றும்

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இதுவும், பதினான்கு சைவ சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்று. பொது, உண்மை என இருபிரிவுகளையுடையது. இதன் 100 செய்யுட்களும் உரையுடன் உள்ளன. பதி பசு, பாசம் ஆகியவற்றின் தன்மைகளை நன்கு விளக்குவது. இது அச்சிடப்பட்டுளது.



வரிசை எண் 4533 சுவடி எண் : 1955-j

# திருவருட் பயன்-உரையுடன்

ஏடுகள் : 23 கி. எண்ணிக்கை: 1000 அளவு: $23\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : உமாபதிசிவாச்சாரியார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பதிமுதுநிலை
நற்குஞ்சரக் கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ்சரக் கன்று காண் எ.து நற்குஞ்சரக்கன்னு
நண்ணில் எ.து, நல்ல ஞானமாகிய வானை முகத்தனை
யுடைய விக்கெனே சுரனைப் பொருந்தின வன்னோர்
மெய்ஞ்ஞான நீங்கி ஞானம் பிரகாசியா நிற்கும்

முடிவு :

பேரின்பத்தை சறுவான்மாக்களும் பெற்றிருக்கவேணு
மென்று மிகுதியுந் திருவுளத்திலே வருந்துவார்களென்றவாறு. —10.
அனைந்தோர் தன்மை முற்றும்.
திருவருட்பயன் சிந்தனை முற்றும்
வேலப்பசாமி திருவடி களே சரணம்

குறிப்பு :

இதுவும் சைவசாத்திரங்கள் 14-ல் ஒன்று, அச்சாகியுளது.



வரிசை எண் : 4534 சுவடி எண் : 1955-k

## நமச்சிவாய மாலை

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 600 அளவு : $23\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அம்பலவாண தேசிகர் பொருள்: சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

உற்றதனா லம்பலவாணா னாவடுது ரையுட்
பற்றதலாற் பஞ்சாக்கர மாலை —கற்ற

வினம் போலுண்டோ துணை யெல்லோர்க்கும் நமக்கிந்த
மனம்போ லுண்டே துணையா மாண்பு.
சீரேற்று நின்கருணைச் சித்தமே புக்குமலப்
+ + × + +
தூரேற்று மாவடுதண் டுறை நமச்சிவாயனே ! —1.

முடிவு :

தம்பனையே நீயாந் தருங்காமே யானாகும்
வெம்பு மனல்வினையாய் வேண்டுகைக் கொள்கைமா
— — — — — —

குறிப்பு :

இது, திருவாவடுதுறை முதற்குரவர் நமச்சிவாய மூர்த்திகள் மீது பாடப் பட்டது போலும். 132 செய்யுட்கள் முழுமையாக உள்ளன.
இது, எமது சுவடி எண் 343/D-318 சிதம்பரம் குருநமச்சிவாயர் எழுதிய நமச்சிவாய மாலையின் வேறாயது.



வரிசை எண் : 4535 சுவடி எண் : 1955-1

# வைராக்கிய சதகம்

ஏடுகள் : 7 (2,3வது ஏடுகள் இல்லை) கி. எண்ணிக்கை : 300 அளவு $23\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ. பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : பேரூர் சாந்தலிங்க சுவாமிகள்
பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

முக்க ணிறைதரு கிரியை முன்னடத்தி பின்ன தன்றாட்
புக்கண் மறை தேகுணர்வெம் பாச விகள நாசமுற
மிக்க மாவினைத் தினையா வீர னென்ப பூரணவூர்
புக்கினையில் பரானந்தப் பூவையு மேவு வராதல். —1.

முடிவு :

விருப்ப மாயிறு கேட்டின நெஞ்சமே விமலனுக் காளல்லார்
பொருப்பை நோதனஞ் சொரியினு மவர்கனோர் பண்ணிணித்துணையன் புந்
திருப்பி டெலான் றெளும்பர்தன் றொளும்பனாய்த் திரிந்தவா பணிசெய்தீண்
டிருப்பை யென மிக நல்லை யிச் சொல்லு நம்பில்லை யெற்போல் வாயே —50

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 1181/D-1596 போன்றது.

அச்சாகியுளது. அதில் 100 செய்யுட்கள் உள்ளன. இதில் 50 செய்யுட்களே உள்ளன.



வரிசை எண் : 4536 சுவடி எண் : 1955-m

# அதிசய மாலை

ஏடுகள் : 11 கி எண்ணிக்கை : 500 அளவு : 23¾×3½ செ.மீ

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கண்ணாகுங் கண்ணாமுயிற் காவடுதுறையிற்
றண்ணாகும் பலவாணனற் தகுதி-யெண்ணி
யதிசெய மாலை யறைந்தத்தைத் தேர்ந்து
கதிசெயுமா லாற் கண்டு கண்டு.

நூல்

புலிகழாடியும் பாம்புண்ணை போற்றியும் போதமில்லா
வேலிகளாடியு மியுன்னை யேத்தியு மென்று

முடிவு :

உதிக்குமுற் காலுமேக் காலத்து முள்ளத்தை யுற்றுமலஞ்
சதிக்கும் பிறவிக்குந் தானுடஞ் சிவத் சத்தியறந் திக்கு நிறை

ததிமருளாய் மயக்கவே மன்ன நியாய
விதிப்ப தெவ்வாறு சொல் தில்லையு ளாடிய வித்தகனே! —76.

அதிசெய மாலை முற்றும்.
வேலப்பசுவாமி பாதமே கெதி
சங்கரலிங்கம் பிள்ளை

குறிப்பு :

இதில், 76 பாடல்களே யுள்ளன.



வரிசை எண் : 4537 சுவடி எண் : 1956

## விவேக சிந்தாமணி

ஏடுகள் : 50 கி. எண்ணிக்கை : 500 அளவு : 30×2½ 2செ.மீ.
பக்கத்திற்கு: 4 வரிகள் ஆசிரியர் : நீலகண்ட சுவாமிகள் பொருள் : நீதிநூல்
நிலைமை : பழுது முழுமை : முற்றுற்றது எழுத்து தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக கணபதி துணை. குருவே துணை.
விவேக சிந்தாமணி

மானொடு கலையு மாவார் மதனொடு ரதியு மாவார்
தேனொடு பாலு மாவார் திரவிய முள்ள மட்டும்
கானகந் தனிலே வாழுங் கவுதலைக் கரடி போலே
பூனையு மெலிவு மாவார் பொருளது போன போதே! —1

முடிவு :

நோக்குமால் தீப மொன்றே வொன்றது நூற தர்குப்
தீய்க்குநால்ச் சேத முண்டோ திரியில்நெய் யுள்ள மட்டும்
பாக்கியம் படைத்த பெயர்கள் பாரினி லிழைத்த பேற்கு
வாக்குனால் சகாயஞ் செய்தால்க் குறையுமோ வாழ்வு தானே! —100

முற்றிற்று.

காலம் :

தலைப்பு ஏட்டில் :
பிரமாதீட்சு வருஷம் விருட்சிக மாதம். 20-ம் தேதி

குறிப்பு :

இதில், நீதிகளைப் பற்றிய 100 பாடல்கள் உள்ளன.

அச்சாகியுளது. கடைசியில் திருவேகம்ப மாலைப் பாடல் ஒன்று எழுதிய உதிரி ஏடொன்றுளது.



சுவடி எண் : 1957

வரிசை எண் : 4538

# செப்பறை மடம் பொன்னம்பல தேசிகர் பேரில் விருத்தம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30×4 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

வானில்வரு பிறைமவுலி கங்கை நதி
யாமை மழுமா னானையுரி புலியதன்
மால்விடை கபாலம் பினாக மிது முதல்
மற்ற வஸ்துவை யெய்லாங் கரத்தே.

முடிவு :

மலர்கள் சொரி பரிவினிறை
தலமகிமை யதிலதிக வரிசைபெறு மறையதனுளே
நகுநள்ன யுகளபத மலரிலொரு மலருயரு
நடராச ருட னுறைதரும் ஞான தேசிக பரமஞான
பொன்னம்பல மெஞ்ஞான சற்குரு சுவாமியே. —10

செப்பறை மடம் ஸ்ரீஞான பொன்னம்பல
தேசிகர் பேரில் விருத்தம் முற்றும்

குறிப்பு :

செப்பறை மடாதிபதி மீது பாடப்பட்டது. இதன் முதலில் சிவஞான போதச் செய்யுள் எழுதிய ஒரு ஏடும் கடைசியில், டி தேசிகர் மீது பாடிய 2 விருத்தங்கள் கொண்ட ஒரு ஏடும் உள்ளன.



வரிசை எண் : 4539 சுவடி எண் : 1958-a

# சிற்றம்பல நாடியார் கலித்துறை

ஏடுகள் : 24 கி. எண்ணிக்கை : 150 அளவு : 25 × 5 செ. மீ.

பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : சிற்றம்பல நாடிகள் பொருள்: சைவ சித்தாந்தம் நிலைமை: பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தூயவெண் ணீற்றுச் சிற்றம் பல நாடி துடர்ந்தருளாற்
றீயமலங்க ளறுத்துயிர் காட்டித் திருவருளா
லோய விருத்தி யமுதூட்டு நல்லுபகாரத்துக்குக்
காய முயிர் பொருள்கை மாறதாகக் கைக் கொண்டனனே ! —1

முடிவு :

அறங்காட்டிய வடநீழலினால்வர்க் கறத்தி னுண்மைத்
திறங்காட்டிய வெண்ணை மெய்கண்டநாதன் றிருமுன் சென்றே
நிறங்காட்டி யென்னிறந்தன்னையு மாற்றி வெண்ணீற்றையுமிட்
டுறங்காச் சமாதி தந்தான் பரமானந்த வுண்மையிலே ! —22

குறிப்பு:

இது, சைவ சித்தாந்த நிலை கூறுவது. 99-ஆம் ஏட்டில் தொடங்குகிறது.



வரிசை எண் : 4540 சுவடி எண் : 1958-b

# (சிற்றம்பல நாடிகள்) வெண்பா

ஏடுகள் : 34 கி. எண்ணிக்கை : 200 அளவு : 25 × 5 செ.மீ.

பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : சிற்றம்பல நாடிகள் பொருள்: சைவ சித்தாந்தம் நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கண்ணுக்குக் கண்காட்டாக் காட்டுங் கதிமொழிகள்
பொண்ணுக்குப் பெண்விளையாப் பேரின்ப —மெண்ணாகச்
சொல்லா ருயிர்க்குயிராய்த் தோய்ந்தருந்தி யின்புணர்த்த
வல்லான் சிற்றம்பலவன் வந்து.

முடிவு :

அதிரும் புலன்களிக ளாயுமனந் திண்டேர்
கதியொன் றியவருண் மாக்காலாள்ச்—சதுரங்கம்
பூட்டினாற் போலிருக்கப் புக்கடிநிற் கும்புதுமை
காட்டினா னம்பலவன் காண்

குறிப்பு :

இதன் தலைப்பு 'வெண்பா' வென்று மட்டுமுளது.



வரிசை எண் : 4541 சுவடி எண் : 1958-c

# திருக்களிற்றுப் படியார்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை: 450 அளவு: 25×5 செ.மீ.

பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : உய்யவந்த தேவநாயனார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்ப ரென்றறிக
வம்மையப்ப ரப்பரிசே வந்தளிப்ப—ரம்மையப்ப
ரெல்லா வுலகுக்கு மப்புறந்தா ரிப்புறத்து
மல்லாற்போ னிற்ப ரவர்.

முடிவு:

என்னை யுடையவன்வந் தென்னுடனே யென்னளவி
லென்னையுந்தன் னாளாகக் கொள்ளுதலா—லென்னை
யறியப்பெற் றேனறியு மன்பருக்கே யாளா............
..................

குறிப்பு :

இது, சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கனுள் ஒன்று. இது அச்சிடப்பட்டுளது எமது சுவடி எண் 54-o/D-702 போன்றது. சிறப்புக்களை அங்கு காண்க.



வரிசை எண் : 4542

சுவடி எண் : 1958-d

# சிவஞான தீபம்

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 1 00 அளவு : 25 × 5 செ.மீ.

பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : சிதம்பரம் இரேவண சித்தர் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சூத்திர மோதுமுன் சொல்லிறேன்
கெணேசன் காப்பு

சாத்திரம் நிறைந்து பொங்கிச்
சராசர மெங்குந் தானாய்
தோத்திரப் பொருளுந் தானாய்ச்
சொல்லற்று மவுன மற்றும்

முடிவு :

யொருவுத லிருவினை விதிமதி விபரித முறு
பிறவியி னெறியுழலாரே
யருமறை முடிவினீண்ட முடையவ னிணையுமடி
யவரடி யாரே ! — 173

சிவக்கியான தீபம் முற்றும்
குருபாதமே கெதி

குறிப்பு:

இது, எமது சுவடி எண் 597/D-750 போன்றது. இது குமரகுருதாசர் எனும் தண்டபாணி சுவாமிகள் இயற்றிய சிவஞான தீபத்தின் வேறாயது.



வரிசை எண் : 4543

சுவடி எண்: 1958-e

# போற்றிப் பஃறொடை

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 300 அளவு : 25 × 5 செ.மீ.

பக்கத்திற்கு: 17 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்.

பூமன்று நான்முகத்தோன் புத்தேளி ராங்கவர் கோன்
மாமன்னு சோதி மணிமார்பன்—நாமன்னு
வேதவே தாந்தம் விளக்குஞ்செய் விந்துவுட
னாதநா தாந்த நடுவேதம்—போதத்தா.

முடிவு :

முன்கண்ட காலத்து நீங்காத முன்னோனை
யென் கொண்டு போற்றிசைப்பேன் னியான்.

போற்றிப்பஃறொடை முற்றும்
திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 553-b/D-721 போன்றது. இதிலுள்ள கடைசி வெண்பா மேற்கண்ட நூலில்லை.



வரிசை எண் : 4544 சுவடி எண் : 1958-f

# தத்துவ ரூபம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 200 அளவு ; 25 × 5 செ.மீ
பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

........ ராட் புருஷ நாராயண மூர்த்தி
தேக ரோம கூபப் பிரளையத்தில்
அமிழ்ந்திக்கிடக்கும் பல்லாயிர கோடி
பேரண்டத்தி னுள்ளிருக்குஞ் சிற்றண்டப்
பிரமாணம் கீழண்டத் தொடு ஷி யோசனை

முடிவு :

சுத்த வித்தை யீசுரத்திலும் ஈசுரஞ் சாதாக்கியத்திலுஞ்
சாதாக்கியம் விந்துவிலும், விந்து நாதத்திலும்
நாதஞ் சுத்த மாயையிலும் ஒடுங்கின தாக்ப்
பாவிக்கவும்.

குறிப்பு :

இதில், தலைப்பு பென்சிலால் எழுதப்பட்டுளது. அண்டங்கள் எத்தனை எத்தனை யோசனை தூரம் என்று கூறப்பட்டுள்து.



வரிசை எண் : 4545 சுவடி எண் : 1958-g

## தத்துவம்

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 1200 அளவு : 25×4 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவே துணை.

தவலித் தாமரை தாதார் கோயில்
அவளைப் போற்றுது மருந்த ழ் குறித்தே.

நூல்

கிறேதத் திறேதத் துவாபரங்களை வென்ற
குரு சுவாமி அவருடைய ஸ்ரீபாத
கமலங்களிலே ஞான பத்தி வைராக்கிய மென்கிற

முடிவு :

சுத்தமாம் வேள்வி தன்னில்
சொல்லற நடத்தி னாரும்
முத்தியை யடைவ ரென்று
மொழிந்தனர் முனிவ ரெல்லாம்

முற்றும்

ஹரி: ஓம் நன்றாக குருவே துணை

அகிலாண்டவள் பாதாரவிந்தமே கெதி.

குறிப்பு :

இது, தத்துவங்களை விளக்கமாகக் கூறுவது.



வரிசை எண் : 4546

சுவடி எண் : 1958-h

# அனுபூதி விளக்கம்

ஏடுகள் : 2½ கி. எண்ணிக்கை : 150 அளவு : 25 × 4 செ.மீ. பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

திருந்து வடகயிலை தனிற் பரமசிவ
 னித்த சிவஞான போதமுணர் நந்திமுதற்
சிறந்தே வருங்குரவர் வெண்ணை நல்லூர்
 மெய்கண்டதேவன வனங்கருட் சந்ததியி
னமச்சிவாய தேசிகனா மிருங் குறவன் னித்த
 சிவப்பிரகாச தேச னிலங்கு மறைவனத்தரு கோர்வனக்
குகையிலுறை நாட் பொருந்தியவன்றிரு வடிக்கீழ்
 அவனருளேவலினாற் போந்தருளாவடுதுறை வாழ்
 நமச்சிவாயனைப் புகழ்வாம். —1.

முடிவு :

றிண்மையராஞ் சாதகருளருந்திடினுந் துனை மறவார்
 சேய்விளையாட்டினை மறவாதனை யடித்நூட்டி டினு மிக
வெண்மையாங் குணக்கோமா னிலங்கிடுமா விடுதுறை
 வாழ்வெனு நமச்சிவாய னெனக்களித்த நெறியிவை தேரே !
 —13.

அனுபூதி விளக்கம் முற்றும்.

குறிப்பு :

இது, திருவாவடுதுறை நமச்சிவாய மூர்த்திசுவாமிகளைப் புகழ்து கூறு முகத்தான் சைவசித்தாந்தம் கூறுவது.



வரிசை எண் : 4547 சுவடி எண் : 1958-i

# திருவண்ணாமலை அய்யர் தெசகாரியம்

ஏடுகள் : $3\frac{1}{2}$ கி. எண்ணிக்கை : 200 அளவு : 25 × 4 செ.மீ

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : திருவண்ணாமலை ஐயர் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

அளவிலா வண்ட மாயை யான கன்ம
மாணவத்தோ
டளவிலாச் சீவனுற்ற வபக்குவ மறிந்தசீவ
னளவிலாப் பிறவி நீத்தே யளவிலா வருளைச்சார்ந்தே
யளவிலா வானைப் பெற்றே யளவிலாச் சுகமாகும்மே. —1.

முடிவு :

இந்திரியங்க டன்மாத்திரைகள் நாடிகள்
வாயுக்க ளோர்ந்துபப் பத்துப் பூதமோ
ரைந்து மவை ஐ யைந்தே யைந்து சுத்த மேழ்
வித்தை யாங்கார மூன்று மூன்றாம்
வந்திடுங் குணங்க ளான்கா மவர்க்கந்தக்
கரண நான்கே. —24.

திருவண்ணாமலை யையர் தெசகாரியம் முற்றும்

சிவமயம்.

குறிப்பு :

இது, சீவனது பக்குவ நிலைக்குரிய தத்துவம் கூறுகிறது.



வரிசை எண் : 4548 சுவடி எண் : 1958-j

# தத்துவ நூல்

ஏடுகள் : 3 கி எண்ணிக்கை : 100 அளவு : 25 × 4 செ.மீ.

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம:

என்றினிய தேசிக னியம்புவது கேளா நின்ற
புதல்வன் றொழுது நீடருளினாலே
யன்று ........... ய மளித்த முறை நாயேற்
கின்றருள் செய் யென்றிடலு
மேந்த லருள் செய்வான் —1

முடிவு :

உண்மையாம் ஞானானந்தர் வொளியினுளட ..................
திண்மையாங் குணங்க ளோடுஞ் சேர்ந்தனுபவித்து——————
......மையாலதி செயங்கண் மாய்ந்தா னாகி
நுண் — ————போகந்தனாமென றுவலுங்காலே. —12.

குறிப்பு :

தலைப்பு அறியக்கூடவில்லை.



வரிசை எண் : 4549 சுவடி எண் : 1958-k

# சன்னியாசி ஆச்சிரம ஞானாச்சாரியார் அபிஷேக விதி

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25 × 4 செ.மீ

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை: பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

ஆதியந்த முணர்ந்த மெஞ்ஞானி யாதீனத்தின்
அபிஷேக விதி புவியிலனுஷ்டிப் போர்க்குரைப்பாம்
சோதி சிவாலய மீசானிலத்தில்

முடிவு :

துதித்தருளால் பூதிசாதன பாக்கியம் பெற்று
சுகதேவ தேவேந்திர சுபம் பொருந்து வாரே! —11

திருச்சிற்றம்பலம்

பொன்னம்பலவன்றிருவடிகளே சரணம். சன்னியாசி
ஆச்சிரம ஆதீன குரு தெட்சணாமூர்த்த தேசிகனபிஷேக
விதிக்கவி பதினொன்று நீடூழிவாழ்க சிவமயம்
சிவராமலிங்கம் எழுதினது. நீடூழி காலம் வாழ்க

அருணாசல ஞான குருதேசிகன் பழமலையினாத தேசிகன் துணை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 1954-b போன்றது. இதன் பின் ஒரு உதிரி ஏடுளது.



வரிசை எண் : 4550 சுவடி எண் : 1959-a

# வீட்டுநெறிப் பால்

ஏடுகள் : 15 கி. எண்ணிக்கை: 600 அளவு : 23×4 செ.மீ

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நீதிநூல்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பத்துத் திசையும் பரந்த கடலெங்கு
மெத்தங்கு நிற்குஞ் சிவம். —1

விண்ணிறைந்து நின்று விளங்குஞ் சுடரொளிபோ
லுண்ணிறைந்து நிற்குஞ் சிவம். —2

முடிவு :

வேண்டுவார் வேண்டும் வகைதான் விரிந்தெங்கும்
காண்டற் கரிய சிவம். —310

குறிப்பு :

திருக்குறளில் வீட்டு நெறிப்பால் இல்லை எனல் கருதி இத் தலைப்பில் நூல் யாத்துள்ளனர் போதும்.

இதில், பிறப்பு நிலையாமை, உடம்பு நிலையாமை, பிறப்புறுத்தல், மெய்யகம், ஞான நிலை, அங்கி தாரணை, அமிர்த தாரணை முதலான 31 அதிகாரங்கள் குறட் பாக்களோடு உள்ளன.



வரிசை எண் : 4551 சுவடி எண் : 1959-b

# அட்டாங்க யோகம்

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 700 அளவு : 23 × 4 செ.மீ

பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : அறிக்யகூடவில்லை பொருள் : யோகநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம்
பிரத்தியா காரம் தாரணை தியானஞ் சமாதியாக
யெட்டு யிதற்கு விபர மியம மாவது
யீங்கிசை சத்தியம் ஆற்திகம்.

முடிவு :

சாதாறாண நிலைபற்றித் திட்டப்பட்டது
யாருடமோதி யென்று சொல்லப்படு
மாகச் சமாதி யஞ்சுஞ் சொல்லப்பட்டுது.

அட்டாங்க யோக முற்றும்
குருபாதமே கெதி.

குறிப்பு :

இது, மேற்சொன்ன எட்டு அங்கங்களைப் பற்றிக் கூறுவது. யோகே சாதனைக் குரியது இது உரைநடையாக உள்ளது. எமது சுவடி எண் 54-x/D-771 இதே தலைப்பில் குறள் வெண்பாவால் கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4552 சுவடி எண் : 1959-d

# தெட்சிணாமூர்த்தி வைத்தியம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 23 × 4 செ.மீ

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் : மருத்துவம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

காரமென்றால் பல்லியுட கல்லே காரம்
காரத்தில் கடுங்கரா மேரு வென்றால்
சார மென்றால் சாரமது பூமி நாதம்
சாதகமாய் சிலத்தாலே யேழு சுத்தி

முடிவு :

தந்திமா வெள்ளி யொன்ற லொருமாப் போடு
தாரணியில் வயதுபதி னாறு பிள்ளாய்
நந்துலவு மாத்தாளைப் பூசித் தாக்கால்
நாட்டுவான் வேதையிட்டு நடத்திப் பாரே ! —12

குறிப்பு :

இது, எமது வைத்தியச் சுவடி எண் 819-d D-1630 அகத்தியர் சூத்திரம்-13 போன்றது. மருத்துவத்துவத்தில் அகத்திரும் தெட்சிணாமூர்த்தியும் ஒன்றாகக் காணப்படுகிறது. தலைப்பில் தெட்சிணாமூர்த்தி சூளைபடி என்றுளது. விளங்க வில்லை.

இதன் பின்னர் 'சுத்தி பண்ணி' எனத் தொடங்கும் மருத்துவப் பாடல் ஒன்றுளது.



வரிசை எண் : 4553 சுவடி எண் : 1959-c

# திருவருட் பயனுரை பதிமுது நிலை

ஏடுகள் : 53 கி. எண்ணிக்கை : 1300 அளவு : 23 × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவம் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

திருச்சிற்றம்பலம்

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

எ.து அடைந்தோர் பாத் செய்யு நல்ல வருவினையும்
யானை முகத்தினையு மென்று மொருபடித்தா யிருக்கு
மிளமையினையும் பெற்ற கடவுளை

முடிவு :

அலைத விரக்கத்தாற் றளர்தல். இதனாலவர் வீட்டினை விரும்பாத வுயிர்கள் மாட்டிறைவன்போ லருளுடையாராதல் கூறப்பட்டது. —10

அணைந்தோர் தன்மை முடிந்தது முற்றும்.
ஆகத்திருவட் பயன் அதிகாரம் 10-க்குத் திருக்குறள் நூறுக்கு முரை முடிந்தது.

தண்கடந்தை வந்தருளுஞ் சம்பந்தன் றன்னருளா.
லெண்கடந்த நூறுகுற ளென்றுங் —கண்கடங்கட்
குண்டாகி யுண்மை யுளதாகி யுள்ளத்துக்
கொண்டாய்வார் கொள்ளார் குறை.

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

முதலில் ஒரு தலைப்பு ஏடும் ஒரு உதிரி ஏடும் உள்ளன. இந்நூல் அச்சாகியுளது. சைவ சித்தாந்த நூல்கள் பதினான்களுள் ஒன்று. 100 குறள் வெண்பாக்களாலானது.



வரிசை எண் : 4554 சுவடி எண் : 1959-e

# நயினார் நிலையாமை

ஏடுகள் : 30 கி. எண்ணிக்கை : 600 அளவு : 23 × 3½ செ.மீ

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர்: (திருவள்ளுவர்+பரிமேலழகர்) பொருள் :

நீதிநூல் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

நிலையாமை

யஃதாவது அருளுடைமை முதற் கொல்லாமை யிறுதியாகச்
சொல்லப்பட்ட விவற்றுள் × × × × +
நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை. எ து
நிலையுத லிலவாகிய பொருள்களை நிலையுதலுடைய வென்று
கருதுகின்ற புல்லிய வறிவினையுடைய ராதல் துறந்தார்க் கிழிவென்ற
வாறு.

முடிவு :

இதனால் வீடாவதிது வென்பதூம் மஃதவா வறுத்தார்க்
கப்பொழுதே யுள்தா மென்பதூஉங் கூறப்பட்டன. ஆக —40
திருச்சிற்றம்பலம்
இவ்வாற்றா னிம்மை மறுமை வீடென்று மூன்றனையும்
பயத்தலிற் சிறப்புடைத்தாய வறங்கூறினார்.
நயினார் நாலதிகாரம் முற்றும்.

குறிப்பு :

இதில், நயினாரென்பது திருவள்ளுவராயனாக் குறிக்கிறது இதில், நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் ஆகிய 4 அதிகாரங்கள் பரிமேழகர் உரையுடனுள்ளன.



25-வது தொகுப்பு



வரிசை எண் : 4555

சுவடி எண் : 1959-f

# நாடி சாத்திரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 23 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்

நிலைமை : பழுது முழுமை ; முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

கரிமுக னடியை வாழ்த்திக் கையது நெட்டி வாங்கி
பெருவிர லங்கு லத்தில் பிடித்து முவிரலில் பார்க்கில்
ஒருவிர ரோடில் வாதம் யிருவிரலோடில் பித்தம்
செரிகடி விரலி லோடில் சிலேட்ம நாடி யாமே — 1

முடிவு :

விழுத்திடுங் கண்ணும் காந்தும்
மேல்ளினை தெரிவு முண்டாம்
பழுத்திடு முழுது நெஞ்சு
பத்துநாள்ச் சாவு தானே ! — 6

குறிப்பு :

கையில் நாடி பார்க்கும் முறை இதில் கூறப்பட்டுளது.

வரிசை எண் : 4156 சுவடி எண் : 1959-g

# அனுஷ்டனா அகவல்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 23 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : சைவத்தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அடைவுறு நியம வகவலுக் காரூர்க்
கடவுள்மாத் துரைத்த கணபதி காப்பு,
சீர்பெறு மனாதிச் சீவாகமப் படியே
நேர்பெற நித்திய நியமம் புரிவோர்க்

முடிவு :

நயமன் புடனே நவிலகவற்படி நித்திய
நியமம் புரிவோர் நீடு வாழ்வரே !

அனுட்டான அகவல் முற்றும்
குருபாதமே கெதி
சொக்கலிங்கம் துணை.

குறிப்பு :

சைவ சமய தீக்கை பெற்றவர்கள் தினமும் காலையில் செய்யவேண்டிய செயல் முறைகள் இதில் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4557 சுவடி எண் : 1959-h

# அனுட்டான மந்திரம் முதலான மந்திரங்கள்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 23 × 3½ செ.மீ. பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து ; தமிழ்.

தொடக்கம் :

அங்வுங் யீசான மூர்த்தாய நம
அங்வுங் தத்புருஷ வத்திராய நம
அங்வுங் அகோர யிருதயாய நம
அங்வுங் வாமதேவ குய்யாய நம
அங்வுங் சத்தியோஜாத மூர்த்தியே நம

முடிவு :

திதி மூர்த்தியே நம
ஸ்ரீ கண்டாய நம
சிகண்டினே நம

ஆக அனந்தாதி சிகண்டி வரைக்கும் மந்திரம் — 8

குறிப்பு :

இதில், அனுட்டான மந்திரம், சரசுபதி மந்திரம், கேதார விரத மந்திரம், அநந்தார விரத மந்திரம் ஆகியவை உள்ளன.



வரிசை எண் : 4558 சுவடி எண் : 1959-i

# சத்திவிக்கலுக்கு கிசாயம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 25 அளவு : 23 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: மருத்துவம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வருசையுடன் வில்வவேர் நெல்பொறியுங் கூட்டி
வகைக்கு கால் பலமாக னாழிநீரில்
பரிசையுடன் யெட்டொன்றாய் வடித்துக் கொண்டால்
உடலில்வந்த சத்திவிக்க லுடனே போகும்

முடிவு :

விக்கல்வாந்தி மூட்டிவிடும்
பித்தமுடன் உழலை தாக முறையான
சுரந்தீரா மொழிந்த வாறே !

குறிப்பு :

இதில், இரண்டு பாடல்களே உள்ளன. நல்ல மருத்துவமாகத் தெரிகிறது.



வரிசை எண் : 4559 சுவடி எண் : 1959-j

# (ஓமகுண்டம்)

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை: 150 அளவு: 23 x 3½ செ.மீ.
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத்
தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓமகுண்ட தெக்கணத்தி லுத்தரம் பார்த்தே யிருந்து
வாமத்தி லற்கியத்தைப் பத்து கமலத்தி
லோமத் திரவியங்கள் வைத்தே கைத்தலத்த
னாமிகாங் குட்டத்தால் நிரீக்ஷணந்தான்

முடிவு :

சுற்றியவை யிற்றின்டியைப் பரிசித்தே பீள
சுற்றியவை யிற்றி னுனி தொட்டு அதை மீளச்
சுற்றி யவையிற்றி னடுவே பரிசிதத்திலடி நாப்பனுனியாக ..................

குறிப்பு :

இதில், ஓமகுண்டம் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.
தலைப்பு இல்லை. இதன் பின்னர் உதிரி ஏடுகள் மூன்று உள்ளன.



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அறிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்கு முன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும், அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்
24—2—2003

மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குனர்
சரசுவதி மகால் நூலகம்